# சிவஞான முனிவர் நோக்கில் சைவ சித்தாந்தம்

ஆசிரியர்

**டாக்டர் வை. இரத்தினசபாபதி**

வித்துவான், பி.ஓ.எல், எம்.ஏ., பிஎச்.டி.

பேராசிரியர், தலைவர்

சைவசித்தாந்தத் துறை

சென்னைப் பல்கலைக் கழகம்.



**உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்**

33, திருமலைநகர் இணைப்பு

பெருங்குடி, சென்னை-600 096

தமிழூர் 627808. நெல்லை மாவட்டம், தமிழ்நாடு.

மாதவச் சிவஞான யோகிகள் அறக்கட்டளைச்
சொற்பொழிவு—வெளியீடு 1

உலகத்தமிழ்க் கல்வி இயக்க அறக்கட்டளைச்
சொற்பொழிவு—வெளியீடு 7

---

வெளியீடும் உரிமையும் : உலகத் தமிழ்க்கல்வி இயக்கம்,
33, திருமலைநகர் இணைப்பு,
பெருங்குடி, சென்னை-600 096.

முதற்பதிப்பு : ஏப்ரல் 1986.

**விலை. ரூ. 7.50**

SIVAGNANA MUNIVAR
NOKKIL
SAIVA SIDDHANTHAM

Dr. V. Rathnasabapathi

First Edition

21 x 14cms
10 Pt. letters

---

Novel Art Printers
Madras-600014. Phone : 82731.

**சு. ஆவுடைநாயகம்** எம்.எஸ்ஸி (விவசாயம்)
தலைவர்,
உலகத்தமிழ்க் கல்வி இயக்கம்
33, திருமலைநகர் இணைப்பு
பெருங்குடி,
சென்னை-600 096.

# பதிப்புரை

உலகத்தமிழ்க் கல்வி இயக்கத்தின் 7-வது அறக்கட்டளைச் சொற்பொழிவாக மாதவச் சிவஞான யோகிகள் பெயரால் அமைந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு அவர் முழு நிலை அடைந்த சித்திரை ஆயில்யத்தில் வெளிவருகிறது. ஆண்டு தோறும் சிவஞான முனிவர் பிறந்த விக்கிரமசிங்கபுரத்தில் சித்திரை ஆயில்யத்தில் அவருடைய பெயரால் அமைந்த அறக் கட்டளைச் சொற்பொழிவினை நிகழ்த்துவது என முடிவு செய் துள்ளோம்.

முதல் அறக்கட்டளைச் சொற்பொழிவாக டாக்டர் வை. ரத்னசபாபதி அவர்களின் 'சிவஞான முனிவர் நோக்கில் சைவ சித்தாந்தம்' என்ற அறக்கட்டளைச் சொற்பொழிவு நூல் வெளிவருகிறது. குறுகிய காலத்தில் பல வேலைகளுக்கு இடையே உடல் நலக் குறைவையும் கருதாது முனைந்து முயன்று நூலைச் செவ்வையாக முடித்துத் தந்த டாக்டர் ரத்னசபாபதி அவர் களுக்கு மிக்க நன்றியுடையோம். அவரின் தமிழ்த் திறமையையோ சைவ சித்தாந்தப் புலமையையோ எடுத்துக் கூறுவதற்கு எங்க ளுக்குத் தகுதியில்லை. அவர் தகுதியைத் தமிழகம் அறியும். பொது நிலையில் உலகம் அறியும். அவர் எங்கள் வேண்டுகோளை ஏற்று இந்தச் சொற்பொழிவினை எழுதித் தந்தமைக்கு மிக்க நன்றி உடையோம்.

மிகக் குறுகிய காலத்தில் சிறப்புற அச்சிட்டுத்தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா நாச்சியப்பன் அவர் களுக்கு எங்கள் நன்றி.

அன்புள்ள,

**சு. ஆவுடைநாயகம்**

# முன்னுரை

உலகத் தமிழ்க்கல்வி இயக்கத்தால் நிறுவப்பெற்ற சிவஞான முனிவர் அறக்கட்டளையின் சார்பில் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவின் வரிவடிவம் இது.

"இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்" என்ற அளவையியல் உரையின் மூலம் 'உண்மைப்பொருள்' பற்றிய தமிழகத்தின் கொள்கையை உலகத் தத்துவ அரங்குக்கு வழங்கிய திருஞானசம்பந்தர் வழியில் நின்று, ஒன்றும் இரண்டும் என (12), ஆய்தம் என (ஃ) நின்ற தமிழகத்து அருளாளர்தம் கொள்கைகளைச் சிவஞானபோதம் என்ற நூலாக அமைத்த மெய்கண்டார் வழிநின்று, மாதவச் சிவஞான சுவாமிகள் அமைத்துத்தந்த சித்தாந்த சைவத்தின் உலகளாவிய பொதுமை நெறிகள் ஐந்தனைக் கொண்டதாக இந்நூலின் பொருண்மை அமைகிறது.

சித்தாந்த சைவமானது ஒரு கட்டுக் கோப்பான தத்துவக் கொள்கையே என்பதை நிறுவுவதற்கு, அது சில கூறுகள் கொண்டதாக இல்லை எனக் கூறும் குறையை நீக்குமுகத்தான் ஐந்து கொள்கைகளை விளக்கும் முறையில் அமைந்ததே இந்நூல். இவ்வைந்தும் சிவஞானமுனிவர்தம் கைவண்ணத்தாலேயே மலர்ந்தவையாதலின் இந்நூற்பெயர் சிவஞானமுனிவர் நோக்கில் சைவ சித்தாந்தம் என அமைவதாயிற்று. இது தத்துவ இயலாளர்களுக்காகவே அமைக்கப் பெற்ற நூல்.

உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் என்னை உலகத்தமிழ்க் கல்வி இயக்கத்தாருக்குப் பரிந்துரை செய்து, இப்பணியில் ஈடுபடுத்தினார்கள். டாக்டர் ச.வே.சு. அவர்கள் உழைப்பின் மறுஉருவம் உழைப்பு வேறு; அவர்வேறு அன்று. இன்றும் உலகில் உழைப்பாளிகள் பலர் உண்டு. உழைப்பவர் உண்டு தான்; பிறரையும் தம்மைப் போலவே உழைக்க வைப்பார் இல்லை. கடந்த இருபத்தெட்டாண்டுக் காலமாக என்னை முறையுற உழைக்குமாறும் செய்து வருகிறார். உழைக்கலாம்; உழைக்க வைக்கலாம். ஆனால், குறிப்பிட்ட காலத்தில்முடியுமாறு உழைக்கவேண்டும் என்பதும்அவர்தம்

குறிக்கோள். இம்மூன்றாலும் என்னைப் பணிகொண்டு வரும், என் அன்பு நண்பின் பெருந்தகை அவர்களை உழைப்பின் நெறி நின்று நன்றியுடன் வணங்குகின்றேன்.

என்னை உடனாகநின்று இயக்கும் என் பேராசிரியர் 'ஆசி' அவர்களுக்கும், என்னைத் தத்துவநெறியில் நெறிப்படுத்திய என் பேராசிரியர் டாக்டர் இரா. பாலசுப்பிரமணியன், இயக்குநர், இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழகம், அவர்களுக்கும் என் நன்றி கலந்த நல்வணக்கங்கள்.

இந்நூலை உரிய காலத்தில் அழகுற அச்சிட்டுத் தந்த நாவல் அச்சகத்தாருக்கு என் நன்றியும் வணக்கமும்.

இங்ஙன்

**வை. இரத்தினசபாபதி**

Q I. ரோகிணி கார்டன்ஸ்
அரசர் அண்ணாமலைபுரம்
சென்னை-28.
16-4-1986.

# ஆசிரியரைப்பற்றி

1929-இல் பிறந்த இவர் திருப்பாதிரிப்புலியூர், தவத்திரு ஞானியாரடிகளின் மாணாக்கர் ஆவார். மயிலம் சிவஞானபாலய சுவாமிகள் அருள்வழியில் புலவர் கல்வியையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி.ஓ.எல்., எம்.ஏ. (தத்துவம்), பிஎச்.டி. ஆகிய கல்வித் தகுதிகளையும் பெற்று, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையிலும் தத்துவத் துறையிலும் விரிவுரையாளராகவும், பூம்புகார்ப் பேரவைக் கல்லூரியில் இரண்டாண்டுகள் முதுகலைப் பேராசிரியராகவும், சென்னைப் பல்கலைக் கழகத்தின் டாக்டர் இராதாகிருஷ்ணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனத்தில் துணைப் பேராசிரியராகவும் பணிபுரிந்த இவர், இப்போது சென்னைப் பல்கலைக்கழகத்தின் சைவ சித்தாந்தத் துறையின் பேராசிரியராக—தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

# உள்ளுறை



மாதவச் சிவஞானயோகிகள்

# 1. தோற்றுவாய்

''கருணைபொழி திருமுகத்தில் திருநீற்று நுதலும்
கண்டாரை வசப்படுத்தக் கனிந்தவா யழகும்
பெருமைதரு துறவோடு பொறையுளத்திற் பொறுத்தே
பிஞ்ஞகனார் மலர்த்தாள்கள் பிரியாத மனமும்
மருவினர்கள் அகலாத ஞானமே வடிவாம்
வளர்துறைசைச் சிவஞான மாமுனிவன் மலர்த்தாள்
ஒருபொழுதும் நீங்காமல் எமதுளத்தில் சிரத்தில்
ஓதிடுநா வினிலென்றும் உன்னிவைத்தே உரைப்பாம்''

என்பது சிவஞானமுனிவரைப் பற்றி அவருடைய மாணாக்கர் அருளிய தோத்திரம். திருப்பதிகப் பெருவழி என்னும் பெரு நெறியை இவ்வுலகுக்கு முதன்மைப்படுத்தி அருளிய காரைக்காற் பேய் என்னும் புனிதவதி அம்மையார் இவ்வுலகில் நிலைநிறுத்திய பேரறம் ஒன்று உண்டு. அது அடியவர்க்கு அமுது செய்வித்தல் என்பதே.

அடியார்க்கு அமுது செய்வித்தல் என்ற பெருநெறியை முன்னிறுத்திக் கொண்டு, அருள்நெறி எனப்பெறும் திருப்பதிகப் பெருநெறியை உலகுக் குணர்த்தி, அருளாட்சியில் முதற்பெருங் குருவாக நின்று, உலகமகாகுருவென இவ்வுலகில் முத்துச்சிவிகை யேறிச் செந்தமிழ்ச் சைவநெறி பரப்பிய ஞானத்தமிழாகரர் இவ்வுலக மக்களுக்கு வழங்கிய முதற்பெருஞ்சைவக் கொள்கை ஒன்று உண்டு.

"மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர்நல் விழாப் பொலிவு கண்டார்நல்
உண்மையாம் எனில் உலகர்முன் வருகென உரைப்பார்"

என்ற சேக்கிழார் திருவாக்கின் மூலம் "மதிசூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல் ஒன்றே மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்" என நிலைநாட்டப்பெற்ற ஒன்றைத் தென் தமிழ கத்தில், விக்கிரமசிங்கபுரத்தில், முக்களாலிங்கர் வாழ்க்கையில், பதினெட்டாம் நூற்றாண்டில், நாம் காண முடிகிறது. சிவனடிய வர்கட்கு அமுதளித்தல் என்ற அருந்தவத்துப் பெரும்பேற்றின் அருமையை, அதனால் விளையும் பயனை, நற்பேற்றின் வளமை யைச் சிவஞான முனிவர் தம் வாழ்வியல் வெற்றி என நம்மால் அனுபவித்துணர முடிகிறது.

உலகமதில் வாழ்கின்ற உயிரனைத்தினுக்கும் உடல் முதலியவைகளைத் தந்து புரக்கும் உயர்சிவம் ஒன்றேயாதல் போல, தமிழும் சைவமும் எனநின்ற இரண்டோடும் தொடர்புடை யார் யாவரேயாயினும், எந்நிலத்தவரேயாயினும், எந்நூற்றாண் டினரேயாயினும் அவரெலாம் சிவஞான முனிவர் தம் மாணாக்கரே எனக் கொள்ளுமளவிற்கு உலகிறந்த, காலமிறந்த குருமுதன்மை ஏற்று நின்ற மாதவச் சிவஞான சுவாமிகளின் வரலாற்றுப் பின்னணியினை சற்றே உளங்கொளல் வேண்டும்.

இந்திய நாடே அடிமைத் தளையில் அவதியுற்றிருந்த வரலாற்றுப் பின்னணியில் தமிழும் சைவமும் தாழ்மையுற் றிருந்ததை அறியாதார் யார்?

வேற்றுமொழிக் கல்வியே விரும்பப்பெற்று, அடிமைத் திறம் போற்றுதற்குரிய ஆரவாரக் கல்வியே போதும் என்ற நிலையில் தமிழர் இருந்த நிலை.

அடிமை என்பது வரலாறு தந்த வாய்மையேயாயினும், தமிழுக்கும் சைவத்துக்கும் உரிய தன்னேரில்லா மரபு நெறி உண்டு என்பதையும் நாம் உணர்தல் வேண்டும்.

தொல்காப்பியமே முதலாக வரும் இலக்கண இலக்கிய சமுதாய வாழ்வியல் மரபுகளும், சங்க கால இலக்கியங்கள் அமைத்துத் தந்த தமிழக மக்களின் வாழ்வியல் மரபுகளும் அவை களை ஒட்டிய நிலையில் இரட்டைக் காப்பியங்கள் அமைத்துத்

தந்த வாழ்வியல் மரபுகளும் சிவஞான சுவாமிகளின் வாழ்வியற் பின்னணிகளாக அமைந்தன எனக் கொள்ளுவதில் தவறில்லை.

வேதம், வேதாந்தம், ஆகமம், ஆகமாந்தம் என்ற நான்கு அடிப்படைகளில் சமய, தத்துவக் கொள்கைகள் விளக்கப்பெற்றன. அதே சமயத்தில், வேதத்துக்கு முரணான கொள்கைகளும் எழுந்தன. பௌத்த, ஆருகத, உலகாயதக் கொள்கைகள் தமிழகத்தில் தம் செல்வாக்கைப் பயன்படுத்தி வளர முற்பட்ட போதெல்லாம் வேதக் கொள்கைகளும் ஆகமக் கொள்கைகளும் இடையிடையே வந்து மக்கள் மன்றத்தில் விளக்கம் கூறித் தம்மை நிலைநாட்ட முற்பட்டன் என்பதையும் காணமுடிகிறது.

அவ்வகையில், வைதிகநெறி சைவநெறி என இருவகை நெறிகள் பெருகியோங்கி நிற்க, இவற்றினுள்ளும் உயர்வு தாழ்வு நிலைகள் பேசப்பெற்றன என்பதையும் நாம் காணமுடிகிறது.

இந்நிலையில், காரைக்காலம்மையாரை உள்ளிட்டு ஒரு பெரிய அருளியல் எழுச்சியானது தமிழகத்தில் தோற்றம் பெற்றது. காரைக்காலம்மையாரை அடுத்து, தமிழ்நாடு செய்த தவப்பயன் காரணமாகத் திருஞானசம்பந்தர் முதலாக நின்ற அருளாளர்கள் சிவநெறிக்குத் தமிழ் வாயிலாகத் தொண்டு செய்தனர். ஞானசம்பந்தரை ஒட்டிய கால அமைப்பில் அப்பரடிகளும், பின்னர் நம்பியாரூரரும் திருவருள் வழிபட்டு நின்று திருமுறை நெறியை-தமிழ் தழையும் அருள்நெறி வாயிலாகச் சமயத் தொண்டு செய்தனர். முத்தமிழ் வாயிலாக ஆகமத்தின் வழிவந்த சிவநெறி தமிழ்மக்களிடையே நன்கு வேரூன்றி நிலைபெறுவதாயிற்று.

நம்பியாரூரர் அருளிய **திருத்தொண்டத்தொகை**யானது தமிழக மக்களின் அருளியல் வரலாற்றில் புதிய திருப்பத்தை உண்டாக்கியது. அதன் அடிப்படையில் மலர்ந்ததே சேக்கிழாரின் **திருத்தொண்டர் புராணம்.** நம்பியாரூரர் காலத்தில் திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தே அமைந்த **புனிதர் பேரவை** இயக்க வடிவம் பெற்று, சைவசமயக் காப்பகமாகத் திகழ்ந்தது. தமிழகத்து அருளியற் சைவத்துக்குரிய நெறிமுறைகளிற் பிழை காணப்படின் 'புறகு' எனத் தவறு செய்தாரை வெறுத்து ஒதுக்குமளவுக்கு ஆற்றல் பெற்றதாகப் புனிதர் பேரவை இருந்தது. அதனாலேயே சைவநெறி உலகினில் விளங்கி வெல்க என்று சொல்வதற்குப் பதிலாக,

"மதிவளர் சடைமுடி மன்றுளாரைமுன்
துதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே"

என்று சேக்கிழார் கூறும் அளவுக்கு அக்காப்பகம் வலிவு பெற்றிருந்தது.

அருளாளர்களின் வாழ்வையும் வாக்கையும் மூலமாகக் கொண்டு சாத்திர நூல்கள் தோன்ற முற்பட்டன. பன்னிரு திரு முறைகளில் ஒன்றாகிய **திருமந்திரம்** சாத்திர நூலாகத் திகழ்ந்த போதிலும், **ஞானாமிர்தமே** முதல் சாத்திர நூலாகத் தோற்றம் பெற்றது என அறிஞர் கூறுவர். ஆயினும் **மெய்கண்டாரை** முன்னிட்டுக் கொண்டுதான் சாத்திர நூல்கள் தமிழகத்தில் வளம் பெறலாயின.

திருமுறைப் பெருநெறியில் வந்தவரே **மெய்கண்டார்.** அவருடைய மூன்றாம் அகவையில் திருக்கயிலையில் காவல் பூண் டொழுகும் நந்தியெம்பெருமானுடைய திருவருள் மரபில் வந்த சமய குரவர் நால்வருள் நான்காமவராகிய பரஞ்சோதியார், மூன்றாண்டுக் குழந்தைக்குச் சிவஞானச் செம்பொருளை உணர்த்தி, மெய்கண்டார் எனப் பெயரிட்டு, "இப்போது நல்கிய சிவஞானத்தை இனிய தமிழில் அமைத்து எல்லா மக்கட்கும் வழங்குக" என உபதேசித்துச் சென்றார். அவர் தாம் கேட்டு இன்புற்ற சிவஞானத்தைச் **சிவஞானபோதம்** என்று பெயரிய நூலாக அமைத்து, தம்பால் வந்தார்க்கு அறிவுறுத்தி வருவாரா யினர். அவ்வகையில் நாற்பத்தொன்பது மாணாக்கர்கள் அவரிடம் பாடம் கேட்டதாக அறிஞர்கள் கூறுவர். அவர்களில் அருணந்தி சிவாசாரியார், திருவதிகை மனவாசகம் கடந்தார், சிற்றம்பல நாடிகள் ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

அவ்வகையில், சாத்திரக் கொள்கையை வரையறுத்து உணர்த்தும் வகையில் பதினான்கு நூல்கள் அமைந்தன. அவை **மெய்கண்ட சாத்திரங்கள்** எனப்பெற்றன. இங்கே ஒரு கருத்தை உடன் இணைத்துச் சிந்தித்தல் வேண்டும்.

மெய்கண்டாரை முதல்வராகக் கொண்டு மெய்கண்ட சந்தானம் அமைந்தது. அவ்வழியில்

மெய்கண்டார்
அருணந்தி சிவாசாரியார்
மறைஞான சம்பந்தர்
உமாபதி சிவாசாரியார்

என நால்வர் சந்தானாசாரியர்களாக அமைந்தனர். மெய்கண்டாரிடம் நேராகப் பாடம் கேட்ட நிலையில் அருணந்தி சிவசாரியார் **சிவஞான சித்தியார்** என்ற நூலை அருளினார்.

சந்தானாசாரியர்களில் இறுதிநின்ற உமாபதிசிவம் எட்டு நூல்களை இயற்றியவர். அவை முறையே **சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம்** எனப்பெறும்.

தமிழகத்துச் சாத்திரநெறி எனப் பொதுவாகக் கூறினாலும், அது **சைவசித்தாந்தம்** என்ற பெயரைக் கொண்டு விளங்குவது என்பதையும் உடன் நோக்கி உணர்தல் வேண்டும்.

"சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்திக்கும்"
"தற்சிவம் கண்டுளோர் சைவசித்தாந்தரே"

என்ற திருமூலரின் தொடர்கள் சைவசித்தாந்தம் என்ற வழக்கை எடுத்தியம்புவன.

உமாபதி சிவாசாரியார் தாம் அருளிய **சிவப்பிரகாசம்** என்னும் நூலில்,

"தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று;
தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா"

என்று கூறித் தொடங்கியது, சைவசித்தாந்தப் பெருநெறியின் பரந்து விரிந்த ஆய்வியற் கருத்து எனக் கொள்ளலாம். மேலும் அவரே,

**"சைவ சித்தாந்தமானது, புறச் சமயத்தவர்களுக்கு இருளாய், அகச் சமயத்தவர்க்கு ஒளியாய் விளங்கும்; அளவை நெறிக்கு அளவையாய்த் திகழும்; பொன்னும் மணியும் போல் அபேதம்; இருள் ஒளி போல் பேதம், சொற் பொருள்போல் பேதாபேதம் என்று கூறும் பிற சமயங்கள் போலல்லாமல், இறைவன் உயிர்களுடன் உடலும் உயிரும்**

**போல் ஒன்றாகவும், கண்ணும் சூரியனும் போல் வேறாக வும்; கண்ணொளியும் உயிரறிவும் போல் உடனாகவும் இயைந்து நிற்றலை இனிது உணர்த்தும்; வேதாந்த நூல் களின் பிழிவாகவும் தெளிவாகவும் திகழும்''**

என்ற பொருளில்,

''புறச்சமயத் தவர்க்குஇருளாய், அகச்சமயத்து ஒளியாய்
புகல் அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய், இருள் ஒளிபோற் பேதமும்சொற்பொருள்போல்
பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர் கண் அருக்கன்
அறிவொளி போற் பிறிவரும் அத்துவிதம் ஆகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் **சைவ
சித்தாந்தத்** திறன் இங்குத் தெரிக்க லுற்றாம்''

எனத் தம் **சிவப்பிரகாசம்** என்னும் நூலிற் குறித்துள்ளார்.

**சிவப்பிரகாசம்** என்ற நூலியற்றியபின் இவரே **திருவருட்பயன்** என்ற ஒரு நூலை இயற்றினார். இது பத்து அதிகாரங்களைக் கொண்ட நூறு குறள் வெண்பாக்களால் இயன்ற நூல். இந்நூலை இயற்றுவதற்கு முன் இவர் **அருள் முறைத் திரட்டு** என்ற பெயரில் திருமுறைப்பாடல்களைத் தொகுத்து, அவைகளைப் பத்துத் தலைப்புக்களாக வகைப்படுத்தி, அவற்றின் அடிப்படையில் சாத்திரக் கருத்துக்களை அமைத்தார். திருமுறைப் பாடல்களின் பிழிவாகவே சாத்திரக் கொள்கைகள் அமைகின்றன என்ற கருத்தை அமைக்கும் வகையில் உமாபதிசிவாசாரியாரின் அருள் முறைத் திரட்டும் **திருவருட் பயனும்** அமைந்தன. அதற்கு ஒரு காரணம் உண்டு.

காரைக்கால் அம்மையார் தாம் அருளிய **அற்புதத் திருவந் தாதியில்** நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக எனக்கூறி, மெய்ப் பொருளை வெற்று நூலறிவு கொண்டு விளக்க முற்படில் முரண் படுவன ஆகும். **''மெய்ப் பொருளைத் திருவருளால் நோக்கும் விதியுடையேன்**, ஆகையால் எப்பொருளும் ஆவது எனக்கு'' என்று கூறி வரையறை செய்துள்ளார். ஆகையால், உமாபதி சிவாசாரி யாரும் அருளாளர்களின் வாய் மொழிகளாக அமைந்த திருமுறைப் பாடல்களைத் தொகுத்தமைத்துக் கொண்டு அவைகளின் பிழி வாகச் சாத்திர நுண்பொருளை எடுத்து விளக்கும் வகையில் **திரு வருட்பயன்** என்ற நூலை அமைத்தார். எனவே, திருவருளின் வழிநின்று சாத்திரக் கொள்கைகளை வரையறை செய்ய

வேண்டும் என்ற கருத்தை உமாபதிசிவாசாரியார் தாமே முன்னிட்டுக் கொண்டு **திருவருட்பயன்** செய்தமைத்துக் காட்டினார் என்று கொள்ளுதல் வேண்டும்.

தமிழகத்தில் அமைந்த தத்துவ ஆராய்ச்சியின் வரலாறு இவ்வாறாக, வேதத்தின் இறுதிநின்ற வேதாந்தம் எனப்பெறும் உபநிடதங்களின் அடிப்படையில் தத்துவக் கொள்கைகள் நிறுவப் பெற்றன. **பிரமசூத்திரம்** என்பது மூலமாக அமைய, அதற்கு உரை எழுதுவதன் மூலம் தத்துவக் கொள்கைகள் நிலைநாட்டப் பெற்றன. அவ்வகையில், சங்கரர், இராமாநுசர், மத்வர் போன்றவர்களின் தத்துவக் கொள்கைகளின் தாக்கம் தமிழகத்தில் அமைந்தன. நீலகண்ட சிவாசாரியார் பிரமசூத்திரத்துக்குச் சைவ பாடியம் ஒன்றை அமைத்து, அதன்மூலம் சைவக் கொள்கையை நிலைநாட்ட முற்பட்டார்.

மேலே கூறப்பெற்ற வரலாறு, தமிழக மக்கள் வாழ்க்கை, அருளியல் நிகழ்வுகள், திருப்பதிகப் பெரு நெறி, பன்னிரு திருமுறைகள், அவைகளை ஒட்டிய மெய்கண்ட சாத்திரங்கள் என்பவைகளைப் பின்னணியாகக் கொண்ட சூழலில் மாதவச் சிவஞான சுவாமிகள் தம்முடைய வரலாற்றுச் சிறப்புமிக்க திருத்தொண்டினைச் செயற்படுத்தும் திருவினைப் பெறுகிறார் எனக் கொள்ளுதல் வேண்டும்.

இனி, மாதவச் சிவஞான சுவாமிகள் பல நூல்களை இயற்றியுள்ளார்கள். எனினும், மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்துக்குச் **சிவஞான மாபாடியம்** என்ற பேருரை எழுதியமை ஒன்றே அவரைத் 'திருவருட் சிவஞானி' என உலகுக்கு அறிமுகப்படுத்தியது. ஏனைய உரைகளிற் காணப் பெறாததாய்த் திருவருள் ஞானநெறியால் மட்டுமே உணர்ந்துணர்ந்து காணத்தக்க நுண்பொருள்கள் பலவும் இப் பேருரையில் நிறைந்திருந்தமையால் இதனைச் 'சிவஞான முணர்த்தும் பேருரை' எனவும் 'ஞானத்தின் திருவுருப் பேருரை' எனவும் கூறிச் சான்றோர் பலரும் சிவஞான சுவாமிகளையும் மாபாடியத்தையும் ஒன்றெனவே கொண்டு வழிபடுவாராயினர் என்பது வரலாற்றுண்மை.

சிவஞான மாபாடியக் கொள்கைக்கு அரண் செய்யும் வகையில் **தருக்க சங்கிரகம், சித்தாந்தப் பிரகாசிகை, சிவதத்துவவிவேகம்,**

**சிவசமவாத உரை மறுப்பு, சித்தாந்த மரபு கண்டன கண்டனம்** என்ற நூல்கள் மொழிபெயர்த்தும், உரைநடைகளாகவும் அமைக்கப் பெற்றன.

**சிவஞான முனிவர் நோக்கில் சைவசித்தாந்தம்** என்ற இத் தலைப்பின் பொருளைச் செம்மையுறத் தெரிதல் வேண்டும்.

வரையறை செய்யப்பெற்ற எந்த ஒரு தத்துவக் கொள்கையும் சித்தாந்தமே. பிற கொள்கைகளை ஏற்று, விளக்கி, மறுத்து, தன்னுடைய முடிந்த முடிவை இது என உறுதிப்படுத்தி நிறுவுவதே சித்தாந்தம். பூர்வபட்சம் செய்து சித்தாந்தம் செய்தல் என்பது எல்லாத் தத்துவக் கொள்கைக்கும் பொது. ஆனால், **சைவ சித்தாந்தம்** என்ற சொல் முடிந்த முடிபாகிய சைவக் கொள்கை என்ற விளக்கத்துடன் இத்தத்துவத்துக்குரிய **இயற்பெயராகவே** அமைந்துவிடுகிறது. சித்தாந்தம் என்பதை இயற்பெயராகக் கொண்டதே இத்தத்துவத்தின் தனித் தன்மை.

சைவசித்தாந்தத்தில் ஏனைய பேறுகள் சித்திக்கும் என்று விளக்கிய உரைகள் பல. இதுவே முடிந்தமுடிபு; இம்முடிபு எவ் வாற்றாலும் மாற்றமுறாது எனக் காட்டி, இத்தத்துவக் கொள் கையைச் **சைவசித்தாந்தம்** என நிறுவிக் காட்டிய பெருமை மாதவச் சிவஞான சுவாமிகளையே சாரும்.

**சைவசித்தாந்தம்** என்பது இக்கொள்கைக்கு இயற்பெயர் என நிறுவிக்காட்டிய பெருமையுடன் **சித்தாந்த மரபு** இது என வரை யறை செய்துணர்த்திய பெருமையும் மாதவச் சிவஞான சுவாமி களுக்கே உண்டு. தாம் பிறந்த நாளில் நட்சத்திரத்தில் நவக்கிரக வழிபாடு செய்து கொள்வோரும், காளி, துர்க்கை முதலிய சிறு தெய்வ வழிபாட்டைச் செய்வோரும் சித்தாந்த மரபினர் ஆகார் என்பதை வரையறை செய்துணர்த்தவே காஞ்சிப் புராணத்தை அமைத்துக் காட்டினார் எனக்கொள்ள வேண்டும்.

திருத்தொண்டர் திருவடிப்பேறும், மகாவாக்யமாயினும் அது ஐந்தெழுத்தினுள் அடங்கும் என்ற அருள் ஞானமும் சித்தாந்த மரபின் இருகண்கள் எனப் போற்றுதல் மாதவச் சிவஞான சுவாமி கள் வாழ்வியல் விளக்கம். திருமுறை நெறிக்கு அப்பால் ஏதும் இல்லை எனக் கொள்ளலே சித்தாந்த மரபு என வரையறைப் படுத்திய பெருமை மாதவச் சிவஞான சுவாமிகளின் திருத் தொண்டு.

# 2. முனிவர் காட்டிய பொதுமை அளவை

## முன்னுரை

மக்கள் நடைமுறை வாழ்வுக்கு அப்பாற்பட்ட எந்த ஒன்றும் 'கொள்கை' என நிற்கும் வலிமை பெறாது. தத்துவம் என்றால் பொருளின் தன்மை. எனவே, மெய்ப்பொருள் என்றாலும், தத்துவம் என்றாலும் அது வாழ்வியல் நெறியே. அவ்வகையில் வாழ்வியல் நெறிகளின் தொகுப்பே சைவசித்தாந்தம் என்ற பெயரைப் பெறுகிறது.

சங்க இலக்கியங்கள் மேல் கணக்கு, கீழ்க்கணக்கு எனப் பிரிக்கப் பெற்றன. மேல்கணக்கும் பதினெட்டு; கீழ்க்கணக்கும் பதினெட்டே. மேல்கணக்கு என்பன வாழ்வியல் நிகழ்வுகள்; கீழ்க்கணக்குகள் என்பன வாழ்வியற் கோட்பாடுகள். அவ்வாறே **சிவஞானபோதம்** என்பது வாழ்வியல் நெறியை வளமாக்கித் தெரிவிக்கும் கொள்கை நூல்.

தனி மனிதனை நான்கு பொருள்களின் கூட்டு எனக் காண்பது சமுதாயக் கோட்பாடு. உடல், மனம், உயிர், சமுதாயம் என்ற நால்வகைப் பக்கங்களால் இணைக்கப் பெற்றவனே மனிதன் என்பது அதன் விளக்கம். அவ்வாறே உடல், மனம், உயிர், உலகம் என நான்காய் நின்று செயல்படும் தனிமனிதன் இன்னும் எவ்வெப் பொருள்களோடு தொடர்பு கொண்டுள்ளான் என அறிவதும், அவன் வாழ்வியல் அடிப்படை என்ன என்று ஆய்வதும் அவனுடைய கடமைகளே. அத்தகைய ஆய்வினை முழுமை யுறச் செய்தற்கு உறுதுணையாக அமையும் வாழ்வியல் விளக்க நூலே **சிவஞானபோதம்**. அவ்வகையில் அமைந்த சிவஞான போத நூலின் அமைப்பு முறையை எடுத்துக் காட்டும் சிறப்புப்பாயிரம்,

"மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டு கண்இருள் தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி"

மயக்கம் தெளிதல் என்பதை உட்கோளாக அமைத்து ஆய்வதற் கென அமைத்துக் கொடுக்கப் பெற்ற நூலே சிவஞானபோதம் என வரையறுத்தது. எனவே, பொறுத்தற்கியலாத துன்பச் சுமையாம் இவ்வுடலின் கண்ணே ஆன்மாவை ஆராய்ந்து காணுதல் வேண்டும் என்பது முதற்படி. ஆன்மாவை நாடுதலுடன் வேறு சில ஆய்வு களும் அமையும் என்பதும் காட்டப் பெற்றது. எனவே அத்தகைய ஆய்வுக்குச் சிவஞானபோதம் துணை செய்யும் என்பது சிறப்புப் பாயிரம் தந்த செய்தி.

அடுத்த நிலையில், குறிப்பிடப் பெறும் செய்தி மிக முக்கிய மானது. அது வரலாற்றுப் பெருமை.

முன்பொருமுறை இந்நூல் கொண்டே நந்தியெம்பெரு மானுக்கு மலைவு தீர்த்தருளியிருக்கிறார் ஒரு நல்லாசிரியர் என்பதை உள்ளீடாகக் கொண்ட மங்கல வாழ்த்து

கல்லால் நிழன்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

என அமைகிறது.

கல்லால மரத்தின் நிழலில் மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான் அருளுவதற்காக, பொல்லாப் பிள்ளையாரின் இரட்டைத் திருவடிகளை நல்லார் தம் தலைக்கணியாக்கொள்வர் என்பதே உரை.

இதனுள் 'மலைவில்லார்' என்பதற்குரிய பொதுவான உரையை - மலையை வில்லாக உடையவர் என்ற உரையை அமைக்காமல், மலைவை இல்லையாகச் செய்தார் எனவும், மலைவு இன்மையே அவர் தன்மை எனவும் சிவஞான முனிவர் உரைவரை தலின் நோக்கத்தை உணர்தல் வேண்டும்.

நந்தியெம்பெருமானுக்கு மலைவை இல்லையாகச் செய்தார் என்பதால் அருளானர்; நந்தியெம்பெருமான் கேட்பதற்கு முன்ன

மேயே தாமே வெளிப்பட்டுவந்து அருள் மயமான மரத்தின் கீழ் இருந்தார் எனவும் விளக்கம் அமைத்துக் கொள்ள வேண்டும். அருளாளராய் நின்ற அவரும் **சிவஞானபோதம்** என்ற இந்நூலாலே மலைவை இல்லையாகச் செய்தார் எனவும் கொள்ளல் வேண்டும்.

கல்லாலின் கீழமர்ந்த பெருமானை, மலைவின்மை என்ற பண்புடையவர் என நேர்நிறுத்தி விளக்காமல், நந்தியெம் பெருமானுக்கு மலைவை இல்லையாகச் செய்தார் என விளக்குவதன் நோக்கம் என்ன? நேர்நின்று சுட்டியறியப்பெறான்; சார்பு காரண மாக அவனது தடத்தலக்கணம் அறியப்பெறுகிறது.

சிவஞான முனிவர் சித்தாந்தசைவத்தின் கொள்கையாக உலகத் தத்துவ அரங்குக்கு வழங்கும் அளவை இயல் நெறியானது மலைதல் இன்மை. ஒன்றுடன் ஒன்று எதிர்நின்று மோதுதல் என எதுவும் இல்லை. ஒன்றுடன் ஒன்று அடங்கியும் அடக்கியும் இணைந்து நின்று விடுதல்; மலைதல் இன்மையாக நின்று விடுதல் என்பதே சித்தாந்த சைவத்தின் அளவையியற் கொள்கையாக அமைத்துக் காட்டுகின்றார்.

1. இருட்கேட்டிற்கும் நிருவிகற்பம் சவிகற்பம் என்னும் இரு வகைக் காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாதது; மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருவகை உணர்வினுக்கும் இந்நூல் இன்றியமையாதது.

2. ஞேயம் ஒன்றே பெரும்பெயர்க்குப் பொருள். நேய மொன்றே அஞ்செழுத்தின் பொருள்.

3. ஆகம அளவை சார்பாகத் தலைநின்று வழியளவையால் ஆராய்ந்து **பொதுவியல்பு** துணிதல்; பெரும்பெயர்ப்பொருளே சிறந்தெடுத்தோதும் ஆகம அளவை சார்பாகத் தலைநின்று அழுந்தியறிதல்; அதுவே திருவருள் கண்ணாக அநுபூதியிற் கண்டு சிறப்பிலக்கணம் உணர்தல்.

4. பெத்தத்தில் நின்ற நிலைபற்றிக் கூறுதல் பொதுவியல்பு; முத்தியில் நின்ற நிலைபற்றிக் கூறுதல் சிறப்பியல்பு.

5. ஆகமங்களில் இருவகைப் படுத்துக் கூறுவது, ஆன்மாக்கள் தத்தமக்குரிய சோபான முறையால் அறிந்து வருந்தன்மைக் கேற்பத் தூலாருந்ததி நியாயமாக உணர்த்துதல்.

6. தூலமாக விடைகூறிப் பின் உண்மையால் விடைகூறி உணர்த்துதல்.

7. பொதுவியல்பு உணர்த்தும் நூல்கள் பொது; சிறப்பியல்பு உணர்த்தும் நூல்கள் சகசம் (அ) உண்மை.

8. பவுட்கரம், மிருகேந்திரம், மதங்கம் முதலியன பொது; சர்வஞ்ஞானோத்தரம் முதலியன உண்மை. பவுட்கர முதலிய வற்றின் பொருளுக் கேற்பச் சர்வஞ்ஞானோத்தர முதலியவற்றிற் குப் பொருள் கொள்ளாமல் சர்வஞ்ஞானோத்தர முதலியவற்றின் பொருளுக் கேற்பப் பவுட்கர முதலியவற்றுக்குப் பொருள் கொள்வர் திருவருள் கிடைத்த நுண்ணுணர்வினோர்.

பவுட்கர முதலியன முனிவர்களுக்கு அருளியது; சர்வஞ் ஞானோத்தரம் முதலியன கந்தன் கணபதி முதலாயினோர்க்கு அருளியது. பரிபாகத்தில் ஏற்றத் தாழ்வு உண்டு. அதற்கேற்ப வன்மை மென்மை அமையும்.

9. உபநிடதங்களிலும் சுபாவம் முதலியன உலகம் தோன்றி ஒடுங்கும் முறைமையையும், அதற்கு ஒரு கருத்தா உண்டு என்னும் மாத்திரையும் போல்வன உணர்த்துதலின் பொது; சாந்தோக்கியம் இருவகையும் கூறுதலின் பொதுவும் சிறப்பும்; அதன் வசிகை, அதர்வசிரம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம் முதலியன முத்தி நிலையே பற்றிச் சாதகமும் பயனும் கூறுதலின் உண்மை.

10. அதர்வசிகை முதலிய உபநிடதங்களிற் கூறும் பொருள் களும் சிவாகமப் பொருளை நோக்கும் வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தூலாருந்ததி முறைமையாகலின் வேதம் பொது ஆகமம் சிறப்பு நூலெனவும் கூறப்பட்டன.

> ''வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத்
> திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்''

என்றது இம்முறைமை பற்றியே. இவ்வுண்மை உணரமாட்டாதார் உபநிடதங்கள் ஒன்றோடொன்று முரணும் எனவும், உபநிடதமும் சிவாகமும் தம்முள் முரணும் எனவும், சிவாகமத்துள்ளும் ஒன்றோடு ஒன்று முரணும் எனவும் மயங்கி, ஒன்றன் பொருளே பற்றி ஏனையவற்றை இகழ்வர்.

தொன்று தொட்டுவரும் கேள்வியால் அனுபவமுடைய தேசிகன் திருவருள் பெறாமையால் என்பது,

11. மொழிபெயர்த்துக் கூறும் நூல்களிலும் ஞானாமிர்தம் முதலியன பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறுதலின் பொது. திருவுந்தி, திருக்களிற்றுப்படி உண்மை.

12. **பொதுவியல்பு** அளவை முகத்தானும் இலக்கண முகத் தானும் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தால் உணரப்படும்; **சிறப்பியல்பு** சாதன முகத்தானும் பயன் முகத் தானும் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்ற நான்கு வகையானும் உணரப்பெறும்.

13. இருவகை இயல்பும் கூறும் ஆகமங்களின் பொருள் ஒருமை உணர்த்த எழுந்தது சிவஞானபோதம். இவ்வாறு கொள் ளாது எல்லா ஆகமப் பொருளையும் **தொகுத்து** உணர்த்த முற்பட்டது எனல் பிழை.

14. "உயர் ஞானம் இரண்டாம் மாறா மலமகல
அகலாத மன்னு போதத்
திருவருள் ஒன்று; ஒன்று அதனைத் தெளிய ஓதும்
சிவாகமம் என்று அறியச் செப்பும் நூலே"

என்பவாகலின் பரஞானம், அபரஞானம் இரண்டும் சிவஞானமே. அவற்றுள், பரஞானத்தைப் போதிப்பது எல்லா அபரஞானங் கட்கும் பொதுவாதலின், சிவஞானம் என்றது அவ்வபரஞான மாகிய சிவாகமமேயாம். **போதித்தல்** நிச்சயம் பொருள் இதுவென உணர்த்தல்; சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்துதல் சிவஞானபோதம்.

15. வேதம் சிவாகமம் ஒன்றனோடொன்று மறுக்கப் பெறா.

16. சாருவாகம், புத்தம் முதலியன சோபான முறையே.

17. அன்னமயகோசம் முதலிய கோசங்கள் ஐந்தனுள் தூல, சூக்கும வேறுபாடு.

18. கீழ்கீழ் நூல்கள் மேல் மேல் நூல்களால் மறுக்கப்பெறல்.

19. வேதமும் சிவாகமும் ஒன்றேயாயினும் இருபகுதிப் பட்டது. வேதம் மூன்று வருணத்தாருக்கும் சிவாகமம் நான்கு வருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றியாதலால் சிவாகமங்கள் பிரமாணம்.

20. "வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூலிவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதி அமலன் தருநூல் இரண்டும்
ஆரணநூல் பொது சைவம் அரும் சிறப்பு நூலாம்
நீதியினால் உலகர்க்கும் சத்திநி பாதர்க்கும்
நிகழ்த்தியது நீள்மறையின் ஒழிபொருள் வேதாந்தத்
தீதில் பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம்
பிறநூல் திகழ் பூர்வம் சிவாகமங்கள் சித்தாந்த
மாகும்"

இவை தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறுதலின் இரு பகுதிப் பட்டது, என்பதே சிவஞான முனிவர் கருத்து.

மேலே காட்டப்பெற்றவைகள் சிவஞானமாபாடியத்தின் சிறப்புப் பாயிரம் பகுதியில் சிவஞான சுவாமிகள் எடுத்துக் காட்டப் பெற்றவைகளின் குறிப்புக்களே. மேலும் பல செய்திகள் காட்டப் பெற்றிருப்பினும் விரிவஞ்சிய நிலையில் சுருக்கம் தரப்பெற்றது

எனவே, சிவஞானமுனிவர் அளவை நெறிநின்று 'மலை விளக்கம்' என்பதைப் பொதுவகையில் கொள்கை நிறுவுதலுக்குரிய அளவையாகக் கொள்ள வேண்டும் என்று கொண்ட போதிலும், முரண்பாடுகளாக முன்னோர் கருதிய எல்லாவற்றையும் எடுத்துக் காட்டி, அனைத்து மூலங்களையும் இணைத்துப் பொருள் கொள்ளும் வகையில் ஒருவகைப் பொதுமரபு ஒன்றை வகுத்துக் காட்டுகிறார் என்று கொள்ளலாம். அவ்வகையில் திருமுறை களையும் எடுத்துக்காட்டி, இதன் அடிப்படைப் பொருள் இன்னது, இதற்கு இவ்வாறு பொருள் செய்வதுதான் மலைவறப் பொருள் காணும் மரபாகும் என அமைத்துக் காட்டிய வகையில் தமிழகத் தில் பல்வேறு நூல்கள், உரைகள் ஆகியவைகளெல்லாம் கால மாற்றங்களாலும், புறச் சமயத்தவர் போக்கறு நிலை புரிந்தமை யாலும், பண்பாட்டு முறை பிறழ்ந்து படிக்கப்பெற்ற நிலைகளில் அவைகளுக்கெல்லாம் முன்னோர் மொழி மரபு ஒன்று உண்டென எடுத்துக் காட்டி,

"இப்பொருள் இச்சொலின் இவ்வாறு உயர்ந்தோர்
செப்புவர் அப்படிச் செப்புதல் மரபே"

என்ற நூற்பாவின் அடிப்படையில் நின்று தமிழகத்துச் சைவ, சாத்திர மரபு முறை ஒன்றை வகுத்தமைத்து, தமிழகப் பண் பாட்டின் தனிநிலைமையை வரையறை செய்துவைத்தார் எனக்

கொள்ளுதல் அவர்தம் தொண்டின் நிலையினைப் படிநிலைகளில் வைத்து ஆய்வு செய்வதற்கு உரியதாகும் எனக் கொள்ளுதல் நன்றேயாம்.

அவ்வாறே மெய்கண்டாரின் சிவஞானபோதத்தை நோக்க, சிவஞானசித்தியார் வழிநூலாகவும், உமாபதிசிவாசாரியார் அருளிய சிவப்பிரகாசம் சார்பு நூலாகவும் கொள்ளப் பெறுகிறது. வழிநூல் எனநின்ற சிவஞான சித்தியாரையும் சார்புநூல் என நின்ற சிவப்பிரகாசத்தையும் அவ்வந் நெறிகளில் நின்று விளக்கும் ஆசிரியர், மெய்கண்டாரின் நேர் மாணாக்கராக நின்று பாடங் கேட்டும் மெய்கண்டாரைப் பற்றிய சில முக்கிய மதிப்பீடுகளை அருளியும் நின்ற திருவதிகை மனவாசகங்கடந்தாரின் **உண்மை விளக்கம்** சிவஞானமுனிவரால் பெரிதும் போற்றப் பெறாமைக்கும், அவர் அமைத்துக் காட்டும் சுத்தவினா என்பதன் வரையறை பெற்ற விளக்கத்தையும் சிவஞான சுவாமிகள் பெரிதும் போற்றி யமையாமைக் குரிய காரணம் தெரியவில்லை.

அவ்வாறே சிற்றம்பல நாடிகள் மெய்கண்டாரின் நேர்முக மாணாக்கராக அமைந்தவர். **துகளறு போதம்** என்னும் அரிய நூலை இயற்றிய அருளாளர். சிவஞான மாபாடியத்தில் **துகளறு போதம்** எடுத்தாளப் பெறுதல் உண்டு. ஆயினும், அந்நூலின் நுவலும் பொருட்டிறன் பற்றிய சிவஞானமுனிவரின் கருத்து அத்துணைத் தெளிவாக அமையவில்லை எனலாம்.

# 3. உண்மை பற்றிய கொள்கை

## முன்னுரை

அளவை இயல் முறைப்படி சித்தாந்த சைவம் கொள்ளும் வரையறை 'மலைவின்மை' என்பதே. உலகியல் அனுபவத்தில் மலைவுடையன என்று கொள்ளப்பெறும் எந்த ஒன்றும் மலை வின்மை என்ற அடிப்படையில் இணைந்து நிற்கக் கூடியவைகளே என்ற கருத்தை வரையறை செய்துணர்த்திய சிவஞான முனிவர் மெய்ப்பொருளியலாளர் கொள்கைப்படி உண்மை பற்றிய வரை யறைவு கொண்ட கொள்கையை அடுத்த நிலையில் அமைத்துக் காட்டுகின்றார்.

'உண்மை' என்றால் என்ன? உண்மை என்பது ஒத்திருப்பது என விளக்கம் கூறுவது ஒருவகை. ஒரு நிகழ்ச்சியைப் பலரும் ஆம் என ஒத்துக் கொள்ளும்போது அந்நிகழ்ச்சியானது உண்மை என்ற பேற்றைப் பெறுகிறது.

உண்மை என்பது பயன் தருவது என்பது ஒரு கொள்கை. ஒரு ரூபாய் நாணயம் உண்மை என்றால் அதைக் கொடுத்து நான் விரும்பிய பயனைப் பெற முடியும்.

மெய்ப்பொருளியலில் 'உண்மை' பற்றிய கொள்கையைத் தத்துவவாதிகள் எடுத்துக்கூறி நிலை நாட்டுதல் உண்டு. அவ்வகை யில் உண்மை பற்றிய கொள்கையைச் சித்தாந்த சைவமும் கூறுதல் வேண்டும். ஆனால், சித்தாந்த சைவர்கள் பொதுவாக இக் கருத்தை யாரும் வரையறை செய்து காட்டவில்லை என்று கூறி விடுவார்கள்.

முறையாக நிறுவப்பெற்ற எந்த ஒரு மெய்ப் பொருளியற் கொள்கையும் உண்மை பற்றிய கொள்கையையும் பிழை எதனால் உண்டாகிறது என்பது பற்றிய கொள்கையையும் விளக்குவது அறிவாராய்ச்சி இயலில் எதிர்பார்க்கப் பெறும் செய்திகள். அவ் வகையில் சித்தாந்த சைவத்தின் உண்மை பற்றிய கொள்கையை மெய்கண்டார் அமைத்துக் காட்டியுள்ளார். மெய்கண்டாரின் வழி நின்று அக்கொள்கையை வரையறை செய்தமைத்துக் காட்டு கின்றார் சிவஞான முனிவர்.

சிவஞான முனிவரால் வரையறை செய்தமைத்துக் காட்டும் உண்மைபற்றிய கொள்கையானது மெய்ப் பொருளியலுலகில் புதுமையும் நிறைவும் கொண்ட ஒன்றாக அமைக்கப்பெறும் இயல் புடையது என்பதை உணரும்போது சிவஞான முனிவரின் சைவ சித்தாந்தத் தொண்டு காலத்தோடும் கருத்தோடும் குறை நீக்கி நிறைவுடையதாக அமைத்த நற்றொண்டு எனக் கொள்ளுதல் வேண்டும்.

உண்மையின் இயல்பு பற்றிய ஆய்வை நாம் சிவஞான சித்தி யாரில் காணலாம்.

''சொல்லப்பெறும் சமயங்களும், உண்மைப் பொருளை இது என உணர்வதற்குக் கருவியாகிய நூல்களும் மாறுபட்டனவாகப் பலவாக உள்ளன. இவற்றுள் முதன்மைச் சமயம் யாது, அச்சமயப் பொருளை உண்மையில் உணர்த்தும் நூல்தான் யாது என்னில் கருத்து வேறுபாடுகள் மலிந்துள்ளன.

இது பொருந்தும் அது பொருந்தாது என்னும் பிணக்கின்றி முறைமையாக அவையனைத்தும் ஒருங்கே காணப்பெற நின்ற சமயம் எதுவோ அதுவே முதன்மைச் சமயம்; அச்சமயப் பொருளை உணர்த்தும் நூலே நூல் எனப்பெறும். அவ்வகையில் சித்தாந்த சைவமே சமயம், அதனாற் கொள்ளப் பெறும் நூல்களாகிய வேத நூல், சைவநூல் என்பவையே நூல்கள். அவையே அவ்விறைவன் திருவடியில் அடங்கி நின்று பொது நூலும் சிறப்பு நூலுமாய் அமையும்.''

இதுவே, அருணந்தி சிவாசாரியார் வரையறை செய்யும் உண்மை பற்றிய கொள்கையின் ஆய்வு முறை.

''ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள்
ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உள பலவும்; இவற்றுள்
யாது சமயம் பொருள்நூல் யாது இங்கு என்னில்
இது ஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றது யாதொரு சமயம் அதுசமயம், பொருள்நூல்
ஆதலினால் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே
அடங்கியிடும்; அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்''

என்பது சிவஞான சித்தியார், சுபக்கம் எட்டாம் சூத்திரம் 13ஆம் பாட்டு.

உண்மை பற்றிய கொள்கையை வரையறை செய்யும் வகையில் சிவஞான முனிவர் வேறொரு எடுத்துக்காட்டை அமைத்துக் காட்டுகின்றார்.

யானையின் இயல்பைக் கண்ணால் கண்டு தெளிதல் வேண்டும். கண் இல்லையானால் கைகளால் அதன் பல்வேறு உறுப்புக்களைத் தடவிப் பார்த்து, யானையின் இயல்பு இது என உணரப் புகுந்தால், அவர் எல்லாரும் யானையின் ஒவ்வோர் இயல்பையே உணர்ந்து, அதன் முழுமையை உணராதவர் ஆவார். அவர் கூறுவன அனைத்தும் ஒன்றோடொன்று முரணுவன ஆயினும், கண் பெற்றோன் ஒருவனுக்கு அவையாவும் யானையின் ஒருபுடை இயல்புகளாய் அறியப்பெறும். அவ்வாறே எந்த ஒரு பொருளையும் முழுமையாக உணரும் கருவி கொண்டு முழுமையை உணர்தல் வேண்டும். அவ்வாறின்றி, ஏகதேச இயல்பை அறிதல் முழுமையை அறிதல் ஆகாது. பகுதிகளை அறிவதன் மூலம் முழுமையை ஆராய்ச்சி முறையில் அறிதல் அமையாது. அவை ஒன்றோடொன்று முரணியும் நிற்கும். அவ்வாறே முதல்வன் இயல்பை அவன் அருளையே கண்ணாகக் கொண்டு உணர்தல் வேண்டும். அருட்கண் பெறாதார் ஆராய்ச்சி அறிவால் உரைப்பன எல்லாம் முதல்வனது ஒவ்வோரியல்பு பற்றிய ஏகதேச உணர்வாகவே அமையும்; முழுமை இயல்பு பற்றிய உணர்வாக அமையாது, அவ்வாறு கூறப்பெற்றவையெல்லாம் அருட்கண் பெற்றபோது, முழுமையின் கூறுகள் எனத் தெளிவாய் உணரப் பெறும். எனவே, முழுமையை உணரும் கருவி கொண்டு, முழுமையை உணர்தலே உண்மை ஆகும். இது சிவஞானமுனிவர் அமைத்துக் காட்டும் உண்மை பற்றிய கொள்கை.

திருவதிகை மனவாசகங்கடந்தார் தாம் இயற்றிய **உண்மை விளக்கம்** என்ற நூலில் அமைத்துக் காட்டும் கருத்தை இங்கே இணைத்துச் சிந்தித்தல் நலம் பயப்பதாம்.

"பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதானந்தப் பொருளாம்
மெய் காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம் - பொய்காட்டா
மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினா
ஐயா நீ தான்கேட் டருள்"

என்பது **உண்மை விளக்கம்** என்ற நூலின் முதல் வெண்பா. இதனுள் மெய்கண்டார் பற்றிய விளக்கம் அமைவதை ஆய்ந்து காண வேண்டும்.

'மெய்கண்டாய்' என விளித்த மனவாசகம் கடந்தார் அவரை மூன்று நிலைகளில் விளக்கம் செய்கிறார்.

1. பொய்காட்டிப் பொய்யகற்றி மெய்காட்டும் மெய் கண்டாய்

2. போதானந்தப் பொருளாம் மெய்காட்டும் மெய்கண்டாய்

3. பொய் காட்டா மெய்யா

என அமைக்கின்றார். மெய்கண்ட நிலைவேறு; மெய் காட்டும் நிலை வேறு. காட்டும் நிலையில் பொய்யைக் காட்டி, பின்னர் அது பொய் என்று கூறி அதனை நீக்கி, அதற்கு அப்பாற்பட்டது மெய் என்று கூறிக் காட்டுவது ஒருவகை. இது மெய்யை நேர் நிலையிற் காட்டாமல், பொய்யைக் காட்டி, பொய்க்கு மறுதலை யானது மெய் எனக் காட்டும் முறை.

இரண்டாவதாக அமையும் முறை. இதிற் பொய்காட்டும் நிலை இல்லை எனினும், தான் கண்டவாறே போதம் எனவும் ஆனந்தம் எனவும் அப்பொருளை அனுபவத்தாற் காட்டுதல்; பொருளாற் காட்டாதொழிதல்.

மூன்றாம் நிலையானது, பொய்யைக் காட்டாமல், மெய் யாகவே தானிருப்பதன் மூலம் மெய்யைக் காட்டும் நிலை.

மேலே குறிப்பிடப் பெற்ற மூன்று நிலைகளும் மெய்கண்டார் பிறருக்கு மெய்ப்பொருளைக் காட்டிய முறையேயன்றிக் கண்ட முறை அன்று.

மெய்கண்டார் மெய்யை எவ்வாறு கண்டார் என்பதை மன வாசகம் கடந்தார் கூறவில்லையாயினும் தாயுமானவர்

"பொய்கண்டார் காணாப் புனிதம் எனும் அத்துவித
மெய் கண்டான்"

என்று குறிப்பிடுகின்றார். புனிதம் எனும் மெய்ப்பொருளைக் கண்டவர் மெய்கண்டார். புனிதம் என்பதே அத்துவிதம் என்ற சொல்லாலும் சுட்டப் பெறுகிறது, மனவாசகம் கடந்தார் 'உண்மை' என்றும், 'சுத்தம்' என்றும் சுட்டும் ஒன்றனை 'மெய்' என்ற சொல்லால் சுட்டவில்லை.

திருவதிகை மனவாசகம் கடந்தார் வாக்கிலிருந்து 'முழுமை' என நின்ற ஒன்றே உண்மை எனவும் சுத்தம் எனவும் கூறப் பெறுகிறது என அறியலாம். இங்கே பூமி முதலியன முழுமை நிலையில் விளக்கப் பெறுகிறது. ஏகதேசத்தை உணர்த்தி அதன் மூலம் முழுமையை ஆய்ந்தறியும் முறை பின்பற்றப்படவில்லை.

எனவே, முழுமையை அறியும் ஆற்றல்மிக்க கருவியைத் துணையாகப் பெற்று, முழுமையை முற்றாக அறிதல் என்ற முறை **உண்மை விளக்கம்** என்ற நூலின் ஆசிரியரால் அமைத்துக் காட்டப் பெறுகிறது.

இனி, 'உண்மை' என்பதை மரபு முறையில் எவ்வாறு அறியவும் அறிவிக்கவும் செய்தார்கள் என்பதையும் இங்கே நாம் இணைத்துக் காணலாம்.

திருஞானசம்பந்தப் பெருமான் தம் தந்தையாரின் வேண்டுகோளுக்கிணங்க, தாம் பலவாகப் பாடிய பதிகங்களையெல்லாம் தொகுத்து நிறுத்தி அவற்றின் உட்பொருள் இன்னது எனச் சுருங்கிய வகையில் விளக்குவதற்காகத் **திருவெழுகூற்றிருக்கை** என்ற பதிகத்தை அருளிச் செய்கின்றார். ஒரு பாட்டே பதிகமாக அமைந்த பெருமையுடையது. எண்ணின் அடிப்படையில் உள் பொருள் இயல்பை உணர்த்த முற்பட்ட திருஞானசம்பந்தப் பெருமான்

"இருமையின் ஒருமையும்
ஒருமையின் பெருமையும்"

என வரையறைப்படுத்தி, உள்ளதன் இயல்பை விளக்கிக் காட்டினார்.

இருமை என நின்றவை அனைத்தும் மெய்மைகளே. ஒருமை என நின்றதே உண்மை.

இரண்டு என நிறுத்தி அறியப் பெற்ற எல்லாம் ஒன்றுடன் ஒன்று முரண்பட்ட மெய்மை நிலைகளே. நன்மை தீமை, இரவு பகல், இறப்பு பிறப்பு, நினைப்பு மறப்பு, இம்மை அம்மை, ஆண்மை பெண்மை ஆகிய அனைத்தும் இருமை நிலைகளைக் கொண்ட மெய்மைகளே. ஒப்புமையுடைய முரண்பாடுகள். ஒன்றுடன் ஒன்று எதிர்மறை எனநின்ற இருமெய்மை நிலைகள்.

உண்மை என்றது எதிர்மறை அற்ற ஒருமை. இருப்பது என்பதற்கு எதிர்மறை இல்லை. உள்ளது என்பது எதிர்மறை யற்றது. இருமை என நின்ற முரண் நிலைகள் பொய்மை எனக் கொள்ளலாகாது. இரண்டும் மெய்மை நிலைகளே.

இருமை நிலையினை உணர்த்தி, இருமையைக் கடந்த ஒருமை என நின்றதே உண்மை. இருமையின் இடையில்தான் உண்மை தோற்றம் பெறும். உண்மைக்குத்தனித்த தாங்கும் இடம் இல்லை. இருமையின் இடையில் இருமையைக் கடந்த ஒருமையானது பெருமை பெற்றுத் திகழும் என்பது பொருள்.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கற்கும் தனித் தனி நிலங்கள் உண்டு. பாலை என்பது நடுநிலைத் திணை எனப் பெறும். அதற்குத் தனி நிலம் முல்லை. இருநிலங்களின் இடையில் பாலை நடுநிலைத்திணையாக இருக்கும் என்பதுவிளக்கப்பெற்றது. உண்மை என்பதன் இயல்பை—உணர்த்த வந்த தொல்காப்பியம்

''ஒன்றே வேறே என்று இருபால் வயின்
ஒன்றி உயர்ந்த பால்''

என இலக்கணங் காட்டி விளக்கியதையும் இணைத்துக் காண வேண்டும்.

திருக்குறளில் நீத்தார் என்பார் இருமையைக் கடந்தார் என்று விளக்கம் காட்டப் பெற்றார். அவ்வாறே திருத்தொண்டர் புராணத்தில் 'புனிதர்' என்பார் யார் என விளக்கும் வகையில் இறைவன் வாக்காகவே அமைந்த திருப்பாட்டாகிய

''பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப்பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார் ஊனம்மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்''

என்பதனுள் இருமையும் கடந்து நின்றார் எனவும் ஒருமையால் உலகை வெல்வார் எனவும் ஊனம் மேல் ஒன்றும் இல்லார் எனவும் வரும் திருவாக்குக்களின் பொருளை ஓர்ந்து உணர்தல் வேண்டும்.

மேலும், பெரிய புராணத்தில் புனிதர் எனப்பெறும் திருத் தொண்டர்களின் இலக்கணம் கூறுமிடத்தில்,

> **"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்**
> ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்"

என உணர்த்திய இலக்கணத்தை ஓர்ந்துணர்தல் வேண்டும். கேடும் ஆக்கமும் முரண்படும் எதிர்நிலைகள். இரண்டையும் கடந்த ஒன்றே, இருமையற்ற ஒருமை என்னும் புனிதம் ஆகும் அற்புதத் திரு என்றும் விளக்கம் செய்யப் பெற்றது.

இனி, எண்ணுப் பெயர்களில் அமைத்துக் கூறும் போது, ஒன்று, பத்து என்ற இருநிலைகளுக்கு இடைநின்று இரண்டையும் கடந்து நின்ற தொன்மை நிலையாம் தொன்பதம், ஒன்பது என்பதை 'உண்மை' என்பதன் உரு எனக் கொண்டு

> "ஒன்பதாகிய உருவுடைப் பெருமான்"

என வள்ளற்பெருமான் இலக்கணம் கூறினார்.

இருமையின் இடைநின்று, இருமையைக் கடந்த 'உண்மை' என்பதை அளவை நெறியின் அடிப்படையில் உணர்த்த வந்த இராமலிங்கர்

> "மருவி உயர்ந்தது உத்தரம்
> மறுத்துக் கடந்தது சுத்தம்"

என வரையறை செய்து உணர்த்திய திறத்தையும் கண்டு தெளிதல் வேண்டும்.

மேலே கூறப்பெற்ற மரபு வழிவந்த விளக்கங்களின் அடிப் படையில் மெய்மை வேறு உண்மை வேறு எனக் கொண்டு மெய்மை என்பது இருமை முரண்களை உடையது எனவும் உண்மை என்பது எதிர்மறை அற்ற ஒருமை அல்லது இருமையின் இடைநின்று மேல் உயர்ந்த ஒருமை எனவும் விளக்கம் அமைத்துக் காண வேண்டும். அவ்வகையில் 'உண்மை' என்பது பற்றிய சித்தாந்தக் கொள்கையை விளக்கும் வகையில், மெய்கண்டார் அருளிய அவையடக்கப் பாடலுக்குச் சிவஞானமுனிவர் விளக்கம் அமைத்துக் காட்டுகின்றார்.

''தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார்
எம்மை உடைமை எனஇகழார்—தம்மை
உணரார் உணரார் உடங்கியைந்து தம்முட்
புணராமை கேளாம் புறன்''

என்பதே மெய்கண்டார் தம்முடைய சிவஞானபோத நூலின்கண் அமைத்துக் காட்டும் அவையடக்கம்.

இந்த அவையடக்க வெண்பாவினுள் 'தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்தல்' என ஒருவகை உணர்தல் நெறி பேசப் பெறுகிறது.

தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்தல் என்ற முறையை முதலில் உணர்ந்து தெளிதல் வேண்டும். தம்மை ஒரு கூட்டுப்பொருள் என அமைத்து, உயிரை அடிமை எனவும், உடல் அமைப்பை உடைமை எனவும் இரண்டாக்கி நிறுத்துதல் வேண்டும். அடிமையும் உடைமையும் என நின்ற இருநிலைகள். இவ்வாறு தம்மை அடிமையும் உடைமையும் என நிறுத்திய போது, இரண்டையும் இணைத்ததாய், இரண்டையும் உடைமை எனக் கொண்டதாய், இரண்டற்கும் பேறளிக்க வல்லதாய் அமைந்த மூன்றாவது ஒன்று தோற்றம் பெறும். அதுவே, **தமை யுடைய தன்** எனப்பெறும்.

உணர்தல் நெறியை இவ்வாறு வரையறை செய்தளித்த அவையடக்கம் 'உண்மை' பற்றிய கொள்கையைக் கீழ்க்கண்ட வாறு வரையறை செய்கிறது.

உண்மை பற்றிய கொள்கையானது மூன்று தனிக்கூறுகளை முன்னிறுத்தி, பின் அவற்றை இணைத்துநின்ற முழுமைக் கூறு என நிற்கும் முறைமையுடையதாகிறது.

உடங்குதல்-முரணுதல். முரணுதலுற்ற பல்வேறு கொள்கை களாக அமைந்தவைகள் அழிதலின்றி இயைந்து இருத்தல் முதல் நிலை. அடுத்த நிலையில், அவை தம்முள் ஒருவகை அக இணைப் பால் புணர்ந்து தழுவி முழுமை பெற்று இருத்தல்.

முரண்படும் தனிமைகள் முதலில் தனிநின்று, பின்னர் அவை தம்முள் இயைந்து நின்று, அடுத்தநிலையில் அவை தம்முள் அகநிலைப் புணர்வு பெற்று, அதனால் இணைந்து முழுமையுற்றுத் திகழ்தல். இது ஒருவகை உறுப்பமைதிக் கொள்கையை ஒத்தது எனக் கொள்ளவேண்டும்.

**உடங்கு இயைந்து தம்முள் புணர்தல்** என்பதே மெய் கண்டார் வழிநின்று மாதவச் சிவஞானசுவாமிகள் வரையறை செய்தமைத்துக் கொடுத்த உண்மை பற்றிய கொள்கை.

உடங்கு இயைந்து தம்முட் புணர்தல் இல்லாத போது பல் வேறு சமய அமைப்புக்கள் தம்முட் கூடிக் குழீஇப் புணர்ந்து ஒருமை பெற்று இணையாதனவாய் அமைகின்றன என்றும் அவ் வகையில் உடங்கியைந்து தம்முட் புணர்ந்து முழுமை பெறாமைக் குரிய காரணம் இன்னது என்பதையும் விளக்கிக் காட்டி அவ்வகை யில் அனைத்துச் சமயங்களையும் நால்வகை நிலைகளில் பிரித்துக் காட்டி நிறுத்தி, இலக்கணம் கூறி விளக்குகின்றார்.

உடங்கு இயைந்து தம்முட் புணர்தல் என்ற விளக்கத்தின் அடிப்படையில் வரையறுத்துணர்த்தப் பெற்ற 'உண்மை' என்ற கொள்கையின் இலக்கியமாகச் சித்தாந்த சைவம் அமைந்து நிற்க, உடங்கு இயைந்து தம்முட் புணர்ந்து முழுமை பெறுதல் இல்லா மையால் நின்ற சமயக் கொள்கைகளை, அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நான்காகப் பிரித்து நிறுத்தி விளக்கம் அமைத்தார்.

**புறப்புறச் சமயம் :** உலகாயதம், மாத்யமிகம், யோகாசாரம், சௌத்திராந்திகம், வைபாடிகம் என்ற நால்வகைப் பௌத்தம், ஆருகதம் என்ற ஆறும், தத்தம் கொள்கைக்குரிய நூல் என ஒன்றை ஏற்று, அதனைப் பிரமாணமாகக் கொண்டு தத்தம் நெறி யில் நிற்கும் கட்டுப்பாடு உடையன ஆதலின் 'சமயம்' என நிற்கும் தகுதி உடையவைகளே. ஆயினும், வேதம், சிவாகமம் என்ற இரண்டையும் **நிந்தித்தல்** காரணமாக அவை புறப்புறச் சமயங் களாயின.

**புறச்சமயம் :** தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங் கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்ற ஆறும், புறச்சமயம் எனச் சிவஞானமுனிவரால் அமைத்து நிறுத்திவைத்தெண்ணப்பட்டன.

இவை ஆறும் வேதம் பிரமாணம் எனப் பொதுவகையாற் கொண்டாலும், தார்க்கிகர் தன்னாற் பிரமாணியம் கொள்ளாமை யானும், வேதப் பொருளோடு மாறுபட்டுப் பொருட்டன்மை கோடலானும், மீமாம்சகர் கருமகாண்டமாகிய வேதமாத் திரைக்கே பிரமாணங் கொண்டு, ஞான காண்டமாகிய உபநிடதங் களை இகழ்தலானும், ஏகான்மவாதிகள் ஞானகாண்ட மாத் திரைக்கே பிரமாணங் கொண்டு கரும காண்டத்தை இகழ்த

லானும், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என்ற மூன்றும் வேதவாக்கியங்களில், தத்தம் மதத்திற்குப் பொருந்துவன மாத்திரையே கொண்டு ஏனையவைகளுக்குப் பிரமாணங் கொள்ளாமையானும், வேதத்துக்குப் புறமாய நூல்களைப் பிரமாணமாகக் கொள்வதனாலும், இந்த ஆறும் சிவாகமங்களை நிந்தை செய்வன ஆதலாலும் புறச்சமயம் என வேறுவைத்து எண்ணப் பெற்றன.

**அகப்புறச் சமயம் :** பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கிய வாதசைவம் என்ற ஆறும் அகப்புறச் சமயம் ஆயின.

பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம் என்ற ஐந்தும் வேதம் சிவாகமம் இரண்டற்கும் பொதுவகையாற் பிரமாணம் கொண்டாலும், அவ்விரண்டற்கும் புறமாகிய பாசுபதம் முதலிய நூல்கட்குச் சிறப்பு வகையால் பிரமாணம் கொண்டதாலும், வேதம் சிவாகமம் என்ற இரண்டாலும் விலக்கப் பெற்றனவற்றை ஆசாரமாக ஏற்றமையாலும் அகப்புறச் சமயமாயின. எஞ்சி நின்ற ஐக்கியவாத சைவம் வேதம் சிவாகமம் இரண்டற்கும் சிறப்பு வகையாற் பிரமாணம் கொள்கின்றதோடு, அவற்றில் விலக்கியனவற்றை ஒழித்து, விதித்தவைகளையே ஏற்று ஒழுகுகின்றது. ஆயினும், எல்லாப் பெருங்கேட்டுக்கும் காரணமாகிய ஆணவமலத் தன்மையை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆணவ மலத்து உண்மையை நிறுவும் சிவாகமங்களை இகழ்கிறது. இக்காரணங்களாலேயே ஐக்கியவாத சைவமும் ஏனையவற்றுடன் இணைக்கப் பெற்று, அகப்புறச்சமயம் ஆறென நிறுத்தப் பெற்றன.

**அகச்சமயம் :** பாடாண வாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாத சைவம், சிவசங்கிராந்த வாதசைவம், ஈசுர அவிகார வாதசைவம், சிவாத்துவித சைவம் என்ற ஆறும் அகச்சமயம் ஆயின. இவை ஆறும் சித்தாந்த சைவரோடு ஒப்பப் பொருளுண்மை எல்லாம் கொள்ளும் அந்தரங்க உரிமை உடையவைகளே. பொருள்களுக்கு அமைக்கும் தன்னியல்பு, பொதுவியல்பு ஆகியவைகளில் மட்டுமே முரணுதல் உண்மையின் இவை ஆறும் அகச்சமயம் என வேறுவைத்து எண்ணப் பெற்றன.

இனி, உமாபதி சிவாசாரியார் அருளிய **சங்கற்ப நிராகரணத்துள்** பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சிவசங்கிராந்த வாதி, ஈசுர அவிகாரவாதி, நிமித்த காரண பரிணாமவாதி, சைவ

வாதி என எழுவகைச் சைவக் கொள்கை எடுத்துக் கூறி மறுக்கப் பெறுகின்றன. இவற்றுள் நிமித்த காரண பரிணாம வாதம் என்பதே சிவாத்வைத சைவம். அதனை அடுத்து நின்ற சைவ வாதம் என்பதே சுத்தசைவம். சுத்த சைவம் நுட்பப் பொருள் உணராத காரணம் ஒன்று மட்டுமே பற்றி வேறு வைத்து எண்ணப்பட்டதன்றி, கருத்து வகையாற் சித்தாந்த சைவத்தில் அடங்கிவிடும். எனவே, பாடாணவாதம், பேதவாதம், சிவசம வாதம், சிவசங்கிராந்த வாதம், ஈசுர அவிகார வாதம், சிவாத்வைத வாதம் என்ற ஆறுமே அகச்சமயம் எனநின்றன.

இவ்வாறு, அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நால் வகையால் ஆறு ஆறு எனநின்ற இருபத்துநான்கு சமயங்களும், **உடங்கியைந்து தம்முட் புணராமை** என்ற காரணத்தால் 'உண்மை' என இணைந்து நிற்கும் அமைப்பைப் பெறாதனவாயின என்று கொள்ள வேண்டும். அவ்வகையில் சித்தாந்த சைவம் **தம்மை உணர்ந்து தமையுடைய தன் உணர்தல் என்பதை** அறியும் நெறியாகவும், உடங்கியைந்து தம்முட் புணர்தல் என்பதை உண்மை பற்றிய கொள்கையாகவும் அமைத்து விளக்கம் கூறியது. இவ்வகையில் சித்தாந்தசைவத்தின் அறியும்நெறி, உண்மைபற்றிய கொள்கைகளை மெய்கண்டார் வழிநின்று வரை யறை செய்தமைத்த பெருமை மாதவச்சிவஞானசுவாமிகளையே சாரும் எனக் கொள்ள வேண்டும்.

இனி, '**உடங்கியைந்து** தம்முட் புணர்தல்' என்ற கொள் கையை, மெய்கண்டார் சிவஞான போதத்து இரண்டாம் நூற்பா வில் அத்துவிதம்' என்ற சொல்லுக்குரிய பொருளை இன்னதென்று அறுதியிட்டுக் காட்டும் இடத்தில் எடுத்தெழுதி விளக்கியுள்ளார்.

அவையேயாய், தானேயாய் எனத் தனித்தனி நிறுத்திப் பொருள் செய்தமைத்த பின்னர், இரட்டுறமொழிதல் என்ற உத்தியின் அடிப்படையில் அவையேதானேயாய் என நிறுத்தி, மூவகை உறவு முறைகளையும் இணைத்துக் காட்டி விளக்கும் வகையில் 'உடங்கியைந்து தம்முட் புணர்தல்' என்ற கொள்கையை மூலமாக அமைத்தே சிவஞான சுவாமிகளின் உரை விளக்கம் அமைகிறது.

தன்மையால் வேறான பொருள்கள் உடங்கியைந்து நிற்றலே 'பிரிவறும் அத்துவிதம்' எனப் பேசப் பெறுகிறது என்பதை எடுத்துக் காட்டி விளக்கு முகத்தால்,

"அரக்கொடு சேர்த்தி அணைத்த அக் கற்போல்
உருக்கி உடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகென்பன் இன்று"

என்று எடுத்துக் காட்டிய உதாரண வெண்பாப் பாட்டினுள், பொருட்டன்மையால் வேறு வேறானவைகள் கலப்பாய் நிற்றல் என்பதே உடங்கியைந்து நிற்றல் என்பதாக அமைத்துக் காட்டி விளக்கம் செய்தார். மேலும், சித்தாந்த சைவத்தின் அருமையை எடுத்துக் கூறி விளக்கும் வகையில்,

புறச் சமயத் தவர்க்கு இருளாய் அகச்சமயத்து ஒளியாய்
புகல் அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும் சொற்பொருள்போல்
பேதாபேதமும் இன்றிப் பெருநூல்சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர் கண் அருக்கன்
அறிவொளி போற் பிறிவரும் அத்துவிதமாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்

என்ற சிவப்பிரகாசச் செய்யுளில் எடுத்துக் காட்டப்பெற்ற பிறிவரும் அத்துவிதமாகும் சிறப்பினுக்கு உரிய மூலக்கொள்கையாக அமைத்து விளக்கப் பெற்றதன் உண்மையை நோக்கி உணர்தல் வேண்டும்.

பதிபசுபாசம் எனநின்ற முப்பொருள்கள் முப்பெருநிலைகளில் அடையும் அவத்தைப் பேறுகள் அனைத்திலும் இணைத்துக் காட்டிப் பொருள் விளக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். விரிக்கிற் பெருகும்.

# 4. சிவஞான முனிவரின் நட்பியலுரை

## முன்னுரை

மாதவச் சிவஞான சுவாமிகள் 'நட்பியல் உரை' செய்யலுற்றேன் என்று கூறுகின்றார். பொழிப்புரை, தெளிவுரை, விருத்தியுரை, பேருரை என்பவைகளைப் பற்றி ஒருவாறு கேள்விப்பட்டிருக்கின்றோம். சிவஞானசுவாமிகளிடத்தில் நாம் கற்றுக் கொண்ட ஒருவகை உரை 'மறுப்புரை' என்பதே. **சித்தாந்த மரபு கண்டன கண்டனம்** என்ற தலைப்பில் சுவாமிகள் எழுதியவைகளைப் படித்தால், வழிபடுமுறையில் வழிபட்டுக் கேட்டால் ஒருவகை உரைவிளக்கம் அமையும் என்று கூறியிருப்பதையும் உணர முடிகிறது.

அப்பைய தீட்சிதர் இயற்றிய **சிவதத்துவவிவேகம்** என்னும் நூலைச் சிவஞானசுவாமிகள் **சிவதோத்திரமாலை** என அமைத்துத் தருகின்றார். அப்பைய தீட்சிதரின் **சிவதத்துவவிவேகம்** அறுபது பாக்களால் இயன்றது. அறுபது பாக்களால் இயன்றதாயினும், அதனை ஒரு நூல் எனக் கொள்ளாது அறுபது தனிமலர்கள் எனவே கருதுகின்றார் சிவஞானமுனிவர். 'சிவபரத்துவம்' என்ற ஒரே செய்தியைப் பற்றிய அறுபது வடமொழிச் சுலோகங்களின் தொகுப்பு எனவே சுவாமிகள் அதைக் கருதினாலும் **சிவதத்துவ விவேகம்** என்ற பெயரால் அப்பைய தீட்சிதர் அதனை அமைத்துக் காட்டிய நிலையை உளங்கொண்டு, சிவதத்துவவிவேகமுடையார் என்றும் சிவதத்துவ விவேகத்துள் காண்க என்றும் சிவஞான மாபாடியத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்.

வேதம், உபநிடதம் என்பவை சுருதிகள். அவைகளுக்குப் பிற்பட எழுந்த ஸ்மிருதிகள், புராணங்கள், பாரதம், இராமாயணம்

போன்ற வடமொழிநூல்கள் ஆகியவைகளில் உள்ள சுலோகங்களாக அறுபதை எடுத்துக் காட்டி, அவைகள் சிவபரத்துவமே கூறுகின்றன என்ற வகையில் **சிவதத்துவ விவேகம்** என்னும் நூலை அமைத்தார் அப்பைய தீட்சிதர்.

'சிவபரத்வம்' என்ற பொருளை நேராகக் கொள்ளவில்லையென்றாலும், அதை உணர்த்துவதோடு, சிவனுடைய மேலாந்தன்மையை உணர்த்தும் உபநிடதப்பொருளை அப்பைய தீட்சிதர் எடுத்து வழங்காதிருப்பது சுவாமிகளுக்குத் தெளிவாகத் தெரிகிறது. அந்த மூன்றையும் எடுத்துக் கூறுதல் வேண்டும் என்பது சுவாமிகளின் அவா. அந்த மூன்றும் உபநிடதவாக்கியங்கள் ஆகையினாலே, அப்பையதீட்சிதர் எடுத்து நிறுத்திய ஸ்மிருதி, புராணச் சான்றுகளுக்கு முன்னர் வைத்துக் காட்ட வேண்டும் என்பது சுவாமிகளின் கருத்தன்று, முன்னர் வைக்க வேண்டிய முறை உபநிடதங்கள் சுருதியோடு இணைந்தவை; ஸ்மிருதிகள் அவைகளுக்குப் பிற்பட்டவை, என்ற வரலாற்றுமுறையும் மரபு முறையுமே காரணம். அதனை, மெய்கண்டாரின் **சிவஞான போதத்து** ஐந்தாம் நூற்பாவில் அமைந்த இரண்டு அதிகரணத்துள் இரண்டாம் அதிகரணத்தின் கீழ் அமைந்த மூன்று வெண்பாக்களுள் முதல்வெண்பாவின் விளக்கமாக அமைத்துக் காட்டுவதை இங்கே காணலாம்.

> "**மன்னுசிவன்** சன்னிதியின் மற்றுலகம் சேட்டித்தது
> என்னும் மறையின் இயல் மறந்தாய்—**சொன்னசிவன்**
> கண்ணா உளம் வினையால் கண்டறிந்து நிற்குங்காண்
> **எண்ணான் சிவன்** அசத்தை இன்று"

என்ற வெண்பாவில் இரண்டாம் வரியில் வருகின்ற **மறையின் இயல் மறந்தாய்** என்பதன் மூலம் அமைத்துக் காட்டப்பெறும் உபநிடதப் பகுதிகள் இவை இவை எனக் கொள்ளும் நிலையில் அவைகளைக் கொண்டுவந்து இணைத்துக் காட்டி,

"ஈண்டுக் காட்டிய அநுமான அளவையேயன்றி" முதல்வன் சன்னிதியில் உயிர் சேட்டிக்கும் "என்னும் **ஆகம அளவையும் உண்மையின்,** அதனை மறந்து, முதல்வனாலன்றியும் உயிர்கள் தாமே உணரும் என முரணிக்கூறுதல் சாலா தென்பார், மன்னு சிவன் சன்னிதியின் உயிர் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் என்றும்,"

என்று குறிப்பிட்டுக்காட்டி, மீண்டும், சிவபரம் பொருளைப் பற்றி மறை கூறும் மேலாம் பொருள் **சிவதத்துவவிவேகத்துள்** இடம் பெறவேண்டும் என்று குறிப்புடன்,

"இதனுட் **சிவன்** என்பது முன்னையது பேரின்பத்துக்குக் காரணம் என்னும் பொருட்டாய்த் தனது சன்னிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது. நடுவணது முற்றுணர்வினன் என்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபு குறித்து நின்றது. ஈற்றது தூயதன்மையன் என்னும் பொருட்டாய் அசத்தை எண்ணாமைக்குரிய இயைபு குறித்து நின்றது. ஆதலாற் கூறியது கூறலன்மை உணர்க. அஃது இம் முப்பொருளுடைத் தென்பது சோமசம்பு பத்ததி வியாக்யான முதலியவற்றுள் காண்க."

என்று எழுதியதோடமையாது, **சிவதத்துவவிவேகத் துள்** மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையே யாமாறு கண்டு கொள்க எனவும் குறிப்பிட்டுக் காட்டினார். இங்கே, சிவதத்துவ விவேகத்துள் மூவகைப்படுத்தோதியது யார்? சிவஞானமுனிவரே மூன்றுபாடல்களை முன்னே யாத்து அமைத்துள்ளார். அதனைச் சிவதத்துவவிவேகத்துள் மூவகைப்படுத்தோதியபொருளும் என்று எழுதுவானேன்? அப்பையதீட்சிதர் அவைகளை இணைக்க வேண்டும், இணைக்கவில்லை என்ற குற்றம் அவரை அடையாமல், அவர்தம் தொகுப்பினுள் முன்னர் நிற்கப் பெற வேண்டிய முறைமையுடைய உபநிடதமாமறைப் பொருள் விளக்கம் இவை என எடுத்துக்காட்டி, ஏனையவைகளை மொழி பெயர்த்தாங்கு, இவைகளும் மொழி பெயர்க்கப் பெற்றன என்ற அளவில் அவைகளை அமைத்துக் காட்டிய முனிவரின் பெருமை அந்நிலையில் உற்றுணர்ந்து காண்பார்க்கே விளங்கும்.

மேலும், **சிவதத்துவ விவேகத்துள்,** அறுபது பாடல்களுக்கும் மூலமான வடமொழிச் சுலோகங்களை இயற்றிய அறுபதின்மர்களுக்கும் ஒருவகை நன்றிகூறும் முறையில், சிவபரத்துவத்தை உணர்ந்து கூறும் நிலையை இயல்பாகவே பெற்றுச் சிறந்த மனம் உடையவர்கள் என வாழ்த்துக் கூறி, அப்பைய தீட்சிதரைப் பற்றி யாதும் கூறாமலே விட்டுவிட்டார்.

**சிவதத்துவ விவேகம்** என்ற அப்பைய தீட்சிதரின் நூல் முதலும் முடிவும் அமைத்து ஒருநூலாக அமைக்கவில்லை என்று

கருதிப் போலும். தொகுப்பாயமைந்த போதிலும் ஸ்மிருதிகள் புராணங்கள் ஆகியவைகளின் சான்றுகளைக் கொண்டதாக விளங்குவது, சுருதிச் சான்றுகளைக் கொள்ளாமையால் குறை யுடையதாகவே முடியும் என்று கருதிப் போலும், சுவாமிகள் சுருதிச் சான்றுகளை முன்னர் அமைத்து, அதனை நூலாக்கி, **சிவதோத்திரமாலை** என யாத்தேன் என்று கூறி, நூற்பயனும் கூறிமுடித்து நிறுத்துகிறார்.

அப்பைய தீட்சிதரின் அறுபது வடமொழிச் சுலோகங்களுக்கு அறுபது பாட்டுக்களை யாத்தமைத்த சிவஞானமுனிவர் முன்னர் ஏழுபாக்கள் அமைத்தார். அவைகளில் முதன் மூன்றும் உபநிடத வாக்கியங்களின் விரிவாகப் **பேரின்பகாரணன், முற்றுணர்வினன், தூயதன்மையன்** எனநின்ற சிவன் பெருமைகளை விளக்கி நின்றன. அடுத்து நான்கு பாட்டுக்கள் சிவதத்துவவிவேகத்துக்குரிய பாயிரம் என அமைக்கப்பெற்றுள்ளன. இவை ஏழுபாட்டுக்களுக்கு அப்பால், அறுபது பாட்டுக்கள் அப்பையதீட்சிதரின் சுலோகங்களின் தமிழாக்கம், இறுதிநின்ற மூன்றும், நூலின் பெயர், படித்தல், பயன் ஆகியவைகளை விளக்கி நின்றன. அவ்வகையில் ஒரு முழு நூலாக ஆக்கியதோடன்றி, அவற்றைத் தோத்திரமாக்கியும் அமைத்தபெருமை சிவஞான முனிவர்க்குண்டு. சிவபரத்துவத்தை எடுத்து மொழிந்தால் அது ஒருவகைத் தத்துவநூல். **சிவஞான போதம்** தத்துவநூல். அதனைக் கோயிலில் தோத்திரநூலாக அமைத்து, ஓதிப் பயன்பெறவேண்டும் என்று கொள்ள முடியாது. அப்பைய தீட்சிதரின் அறுபது சுலோகப் பொருளை வெற்று மொழி பெயர்ப்பாக ஆக்காமல் தோத்திரமாகவே இணைத்து, அதற்கு வாழ்வியல் வகுத்தமைத்து, பயனும் கூறி அமைத்துள்ளார்.

மேலேகூறப்பெற்ற முறையில், **சிவதத்துவவிவேகத்துள்** ஏழாம் பாடலில் **நட்பியல் உரை** வகுக்கலுற்றேன் என்று சிவஞானசுவாமி கள் எழுதிக்காட்டுவதன் நுட்பத்தைத் தம்முடைய ஆய்வுப் பொருளாக அமைத்துக்கொண்டு, சைவசித்தாந்தச் செந்நெறியில் சிவஞானமுனிவர் வகுத்துணர்ந்து தெளிவித்த சித்தாந்தச் செம் பொருளிது என விளக்கிக் காட்டுவதே இத்தலைப்பின் குறிக் கோள்.

**உடலும் உயிரும்**

அவன், அவள், அது என உலகப் பொருள்களை எடுத்துக் காட்டி, அவைகளின் மூலம் உலகத்தையும், உலகின் அடிப்படையில் கடவுளையும்; முதல் நூற்பாவின் பொருளாக்கி;

உடலை எடுத்துக் காட்டி, உடலின் வேறாய் நின்றதோர் உயிர் உண்டு என்பதை மூன்றாம் நூற்பாவின் பொருளாக்கி,

இடைநின்ற இரண்டாம் நூற்பாவினால் இவ்விரண்டு நூற்பாப் பொருள்களையும் கடந்து நின்ற பொருளை எடுத்துக் கூறியும் இணைத்துக் காட்டியும் நிறைவுறுத்தினார் மெய்கண்டார். முதல் நூற்பாவை விட மூன்றாம் நூற்பாவானது,

**"மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது"**
என்பதை முன்னிறுத்தி ஆராய்கின்றது.

உயிரும் உடலும் தம்முள் முரண்பட்டவை. முரண்பட்டவை களாயினும் அவை இரண்டும் ஒத்த மதிப்பீடு உடையவைகளே.

'உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பின் உள்ளே உறுபொருள் கண்டேன்"

என்றும்,

"உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே"

என்றும் திருமூலர் அருளியிருந்தாலும், உடலும் உயிரும் ஒத்த தகுதிப்பாடு உடையவைகளே என்பது எல்லாராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய எளிமையுடைய கருத்தன்று.

## டேக்கார்ட்டின் கொள்கை

பிரெஞ்சு நாட்டுக் கணிதமேதை ஒருவர் தத்துவமேதையாக மலர்ந்தார். அவரே டேக்கார்ட். இக்கால ஐரோப்பிய நாட்டுத் தத்துவக் கொள்கைக்குத் தந்தை என்று தத்துவ உலகம் கொண் டாடும் மெய்ப் பொருளியலறிஞர். ஐயத்துக்கிடமின்றி என்னால் உண்டு என்று ஒத்துக் கொள்ளக் கூடிய பொருள் 'நானே' என்பது தான் அவர் ஆய்வின் முடிவு. "உள்ளுகின்றேன்; உள்ளுகின்ற நான் உள்ளவனே" என்பது அவர் அமைத்த முறை. ஆனால், அவர் அறிவித்த சிக்கல் ஒன்று. மனமும் (உயிர் என நாம் கருதும் பொருளை அவர் மனம் என்றார்.) உடலும் செயற்படும் முறைகளை ஆராய்ந்தார். உடலானது இடத்தை நிரப்பும் பருப்பொருள். மனம் பருப்பொருளன்று; சிந்தனையாற்றலுள்ள நுண்பொருள். தன்மையால் முற்றிலும் மாறுபட்ட இரண்டு பொருள்களுள்,

ஒன்றன் தாக்கம் மற்றொன்றில் காணப்பெறுவதை நாம் அனுபவத்தால் உணர்கிறோம். உடலில் உண்டாகும் வலி முதலியவற்றால் மனத்தின் செயல் பாதிக்கப் பெறுகிறது; அவ்வாறே மனத்தில் உள்ள துன்பவுணர்வுகள் முதலியன வயிற்றில் உள்ள செரிப்பாற்றலைத் தடைசெய்கிறது. முற்றாக முரண்பட்ட இரு பொருள் எவ்வாறு ஒன்றை ஒன்று தாக்கும் என்பதே டேக்கார்ட் அமைத்த **மனம்-உடல்-இருமைக் கொள்கை.** மேலைநாட்டுத் தத்துவ அரங்கில் பல்வேறு விடைகள் வந்தமைந்தன. இவ்வினாவுக்கு ஏற்ற முழுமையான விடையை எந்த ஒரு கொள்கையும் இதுவரை எடுத்துக் கூறி நிலை நாட்டவில்லை.

## திருவருட்பயன்

உயிர்-உடல்-இருமையை ஒட்டிய வினாக்களை ஏற்று விடை அளிக்கும் பணியில் சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கை ஈடுபட்டுள்ளது.

ஊன் அறியாது என்றும்; உயிர் அறியாது ஒன்றும். இவையே இருமை எனநின்ற பொருள்களின் நிலை என்று எடுத்துக் காட்டிய **திருவருட்பயன்** ஆசிரியர் உமாபதி சிவாசாரியார்,

''ஊன் உயிரால் வாழும் ஒருமைத்தே; ஊனோடுயிர்
தான் உணர்வோடு ஒன்றாம் தரம்''

என ஒருவகை விளக்கமும் அமைத்துக் காட்டியுள்ளார். இவை தவிர, ஊனையும் உயிரையும் தனித்தனியே பண்படுத்தும் நிலை இறைவனால் மேற்கொள்ளப் பெறுகிறது என்ற குறிப்பே நமக்கு மிகுதியும் காணப் பெறுவன.

''ஊனநடனம் ஒருபால் ஒருபால்
ஞானநடம் தான்நடுவே நாடு''

எனக்கூறி, இருவகை நடனத்தை இறைவன் அமைத்து ஆடுவதன் நோக்கை நாம் உளங்கொண்டு சிந்தித்தல் வேண்டும்.

எட்டும் இரண்டும் கூட்டி நிறுத்த, அதனால் வரும் கூட்டெண்ணாகிய பத்து என்பதால் உணரப் பெறும் உயிர் என்பதனுள் சி,வ,ய,ந,ம என்ற ஐந்தெழுத்தால் குற்றம் அழிந்தொழியுமாறு ஒரு கூத்தியற்றுவான்.

அவ்வாறே, ஐந்தெழுத்தால் நின்று, ஐந்தெழுத்தால் இயற்றி, ஐம்பொறிகள் என நின்ற உடலை அறிவு நிலையமாக ஆக்குகின்றான். 'ஓம்' என்ற எழுத்தால் மனம் முதலிய அகக் கருவிகளை இயக்கி, அறிவைப் பெறுவதற்கு உற்ற துணைக் கருவிகளாக அமைத்து, உயிரானது அறிவைப் பெற உதவுகிறான்.

இவையனைத்தும் திருவருட்பயன், உண்மைவிளக்கம் என்ற இருநூல்களாலும் கிடைத்த செய்திகள். இவைகளின் மூலம் நமக்குக் கிடைக்கும் தொகுப்புச் செய்தி ஒன்று உண்டு.

உடலானது ஒருமைத்தாய்-ஒற்றித்து உயிருடன் நிற்கிறது. அதனால் வாழும் நிலை பெறுகிறது. உயிரானது உடலோடு ஒன்றி நிற்கிறது; உணர்வைப் பெறுகிறது. உற்றுநிற்றல், ஒன்றி நிற்றல் என்ற அடிப்படையிலேயே உடலானது வாழும் நிலையையும், உயிரானது உணர்வோடு ஒன்றும் நிலையையும் பெறுகின்றன என்று கொள்ள இடம் தருகின்றது. இக்கருத்தை ஏற்பதற்குத் தடையாக இருப்பது ஒன்றே ஒன்றுதான். அதுதான் டேக்கார்ட் கூறிய பொருண்மை வாதம்.

## அப்பரடிகள் தீர்திறன்

பொருள் வரையறைகளை நாம் மெய்ப்பொருளியலில் அணுகி, தெரிவுறத் தெரிந்து கொள்ளும் நிலை அமையவில்லையானால் மீளவும் நாம் அருளாளர்களின் திருவாக்குக்களைத் தேடித்தான் சென்று தாள்பணிதல் வேண்டும்.

''மெய்ப்பொருளைத் திருவருளால் காணும் விதியுடையேன்'' என்பது காரைக்காலம்மையார் திருவாக்கு. அவ்வகையில் சேக்கிழார் நமக்கு முதற்கை கொடுக்கிறார். தில்லையை நோக்கிய பயணம் மேற்கொண்ட திருநாவுக்கரசரின் மனநிலையை,

"ஆனாதசீர்த் தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
வானாறு புடைபரக்கும் மலர்ச்சடையார் அடிவணங்கி
ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொள நினைந்து
தேனாறு மலர்ச் சோலைத் திருப்புலியூர் மருங்கணைந்தார்.''

என (பெரிய புராணம் 1426) அமைத்துக் காட்டினார் சேக்கிழார். இங்கே நமக்குக் கிடைக்கும் அரிய செய்தி ஒன்று உண்டு.

தில்லைக் கூத்தப் பெருமானின் திருநடம் கண்டு நேர்நின்று கும்பிடுதல் என்ற ஒரு நிகழ்வில், ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொளல் உண்டு என்ற அளவில் நாம் அதை அமைத்துக் கொள்ளலாம்.

''நீடும் திருவுடன் நிகழும் பெருகொளி
நிறை அம்பலம் நினைவுற நேரே
கூடும்படி வரும் அன்பால் இன்புறு குணமும்
பெறவரும் நிலை கூடத்
தேடும் பிரமனும் மாலும் தேவரும் முதலாம்
யோனிகள் தெளிவு ஒன்றா
ஆடும் கழல்புரி அமுதத் திருநடம்
ஆராவகை தொழுது ஆர்கின்றார்''

என்பது திருநாவுக்கரசர் தில்லைக் கூத்தன் திருநடம் கும்பிடும் அந்நிலையில் பெறும் இன்பநிலையை எடுத்து விளக்கும் சேக்கிழார் திருவாக்கு (பெரிய புராணம் 1431).

தொழுது ஆர்கின்றார் என்பது திருநாவுக்கரசரின் அனுபவ நிலை. கண்டு தொழுதலும், களித்து உண்ணுதலும் என்ற இரு நிலைகளைக் கொண்ட இருமையைக்கொண்ட ஒருமை அனுபவம்.

தொழுது அமைதல் துய்த்து அமைதல் என்ற இரண்டும் இணையவே அமைவது ஞான இன்ப நிறைவு.

கருத்தையும் காட்சியையும் இணைத்த ஒருவகைக் கூட்டு நிலையால் உடற்பயனை ஒருபக்கமும், அன்பையும் இன்பத்தையும் இணைத்து அன்பால் இன்புறுதல் என்ற ஒருவகைக் கூட்டு நிலையால் உயிர்ப்பயனை இன்னொரு பக்கமும் நிறுத்தி, பின்னர் அவ்விரண்டையும் இணைத்துத் துய்க்கும் நிலையில் திருநாவுக் கரசரை நிறுத்தி, அவர்தம் அனுபவ நிலையின் சூழல் இது எனச் சுட்டிக் காட்டி அமைக்கும் சேக்கிழாரின் செயலானது நாம் அவரைத் தெய்வச் சேக்கிழார் என அழைக்குமாறு நம்மை ஆட் படுத்துகின்றது.

உடல்-உயிர்-இருமை இணையும் நிலை உண்டு எனக் கொண் டாலும் எது? எதனால்? என்பன போன்ற வினாக்களுக்கு உரிய விடைகள் நமக்கு இன்னும் நிறைவாக அமையவில்லை.

அப்பரடிகள் எடுத்துக் கொண்ட குறிக்கோள் அனுபவம் என்பது ஊனாலும் உயிராலும் உள்ள பயன் கொள்ளல் என்பதே.

உடம்பால் அம்பலத்தை, கூத்தினைக் கண்டு மகிழ்ந்து இன்புற்றுத் தொழுதல். இது உடலாற் பெறும் பயன். திருக்கூத்து நாதனுடன் இணைந்து நின்று, அறிவால் அறிந்து, இன்புறுதல் என்பது உயிரால் பெறும் பயன். இவ்வாறு அமைத்து அவர்தம் குறிக்கோளை விளக்கலாம்.

சேக்கிழார் தரும் விளக்கங்கள் ஒருவகையில் அமைதி அளித்தாலும், நாம் அப்பரடிகள் பதிகங்களையே மூலமாகக் கொண்டு ஆய்ந்தால் பயன் விளையும்.

பொதுவாக, வாகீசப் பெருந்தகை 'உயிர்' என்பதற்கே தம்முடைய அனுபவ அடிப்படையில் ஒரு விளக்கம் அமைத்தருளுவார். அதையும் நாம் முதலில் தெரிந்து கொள்வது நம்பிக்கை உலகத்தார்க்குப் போதுமான ஒன்று.

> "ஊன் நிலாவி உயிர்க்கும் பொழுதெலாம்
> நான் நிலாவி இருப்பன் என் நாதனைத்
> தேன் நிலாவிய சிற்றம் பலவனார்
> வான் நிலாவி இருக்கவும் வைப்பரே"

என்பது 'அன்னம்பாலிக்கும்' எனத் தொடங்கும் திருக்குறுந்தொகைப் பதிகத்தின் ஐந்தாம் திருப்பாடல். எளிமையுடையது போலத் தோற்றினும் அருமையினும் அருமையதாம் பொருண்மை வாக்கு இது.

உடம்பு செயற்பட்டுக்கொண்டிருக்கிறது என்பதையோ செயற்படவில்லை என்பதையோ வரையறை செய்வது அதனிடம் உள்ள காற்றியக்கச் செயல். உயிர்த்தல்-மூச்சுக்காற்று உள் செல்வதும் வெளிவருவதுமாக இருத்தல். உயிர்த்தல் என்ற செயலை உடம்பில் செயற்படுத்துவது எதுவோ அதற்கு 'உயிர்' என்று பெயர்.

உயிர்த்தல் என்ற செயலைச் செய்யும் காற்றுக்கு 'உயிர்' என்பது செயலின் அடியாகப் பிறந்த இயற்பெயர். காற்றின் இயற்பெயராகிய 'உயிர்' என்பது ஆன்மாவைக் குறிக்க முற்பட்டபோது 'உயிர்' என்பது ஆன்மாவுக்கு ஆகுபெயராக அமைகிறது.

> "உயிர் எனும் பெயர் இயங்கு காற்கு
> இயற்பெயர் உரைப்பின்
> அயலுறுந் தனக்கு அப்பெயர் ஆகுபெயராம்"

என்று, கற்பனைக் களஞ்சியம் சிவப்பிரகாச சுவாமிகள், **பிரபுலிங்க லீலை**, கோரக்கர் கதி, செய்யுள் 38ல் அமைத்துக் காட்டியுள்ளார்.

உடம்பில் உயிர்த்தல் என்ற தொழிலால் ஒருவகை இயக்கம் அமையும்போது, உயிரானது உடம்பை அவ்வாறு இயக்குகிறது என்று விளக்கம் கொள்ளலாகாது. ஏனெனில், உயிரானது, தனக்கு வேண்டிய நிலையில், உடம்பை இயக்கும் ஆற்றல் உடையது என்றோ, உடம்பை இயக்கும் அறிவுடையது என்றோ கொள்ளுதல் தவறான கொள்கைகள். என்னுடைய உடம்பானது உயிர்த்தல் என்ற செயலின் அடிப்படையில் இப்போது இயங்கிக் கொண்டிருக் கிறது என்றால், இந்த நேரத்தில், நான் என் நாதனைப் பொருந்தி, அவனுடன் நான் நிலவிக் கொண்டிருக்கிறேன்; இதுவே என் செயல். நான் என் நாதனைப் பொருந்துதல் அவ்வளவே. அவன் என்னோடு இருப்பதால் நானோ என் நாதனோ இவ்வுடம்பை இயக்கவில்லை. நான் அவனைப் பற்றுகிறேன். அவன் என்னை **நிலவுமாறு** செய்கிறான். இந்த உடம்பில் மட்டுமன்று; வானுலகத் திலோ அல்லது தேவ உடம்பிலோ என்னை வைத்து நிலவுமாறும் செய்வன். ஆனால், எனக்காக அவ்வவ்வுடம்புகளை அவனே இயக்குகிறான் என்று கொள்ள முடியாது; அவன் எனக்குத் தேனென இனிக்கும் சிற்றம்பலவன்.'' என்று முடித்து விடுகின்றார்.

**நிலவுமாறு செய்கிறான்** என்பதே இவ்விடம் அமையும் குறி யீட்டுச் சொல். மேலும் விளக்கமாக ஒன்றைக் காணலாம். அதுவே அப்பரடிகள் அமைத்துக் காட்டும் **கொள்கை** எனக் கொள்ளல் வேண்டும். ஏனெனில், அது செயற்பாட்டு வடிவமைப்புடன் அவரால் கொடுக்கப் பெற்றுள்ளது.

## அன்பு ஆலிக்குமாறு கண்டு இன்புறல்

''அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலும் இப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறு கண்டின்புற
இன்னம் பாலிக்கு மோ இப்பிறவியே''

என்பது தில்லைத் திருக்குறுந்தொகையின் முதற்பாட்டு. இதனுள் மூன்றாவது வரியில் **என் அன்பு ஆலிக்குமாறு கண்டு இன்புறல்** என்ற கொள்கை விளக்கத்தை அமைத்துக் காட்டியுள்ளார்.

தில்லைச் சிற்றம்பலம் அன்னம் தந்து உயிரையும் உடலையும் பாலிக்குமாறு (விளக்கமுற்றுத்திகழுமாறு) செய்யும் பண்புடையது. பொன்னுலகையே தந்து விளக்கமுற்றுத் திகழுமாறு செய்யும் வல்லமையுடையது. என்றாலும், இப்பூமியில், என்னுடைய அன்பு

மேன் மேற் பெருகி வளரும் நிலையில் காணவும் இன்புறவும் ஆம் வசையில் இப்பிறவியை இன்னும் அமைத்துக் கொடுக்குமோ என்ற பொருளில் அப்பாடல் அமைகிறது.

உடலும் உயிரும் வேறு வேறே. இடை நின்று இணைத்துக் கொண்டிருப்பது அன்பு. தன்மையால் முற்றிலும் முரண்பட்ட இரண்டு பொருள்கள் தாமே தம்மை இணைத்துக் கொள்ள மாட்டா. இரண்டையும் பற்றாசு என நின்று இணைக்கும் வேறு ஒரு பொருள் தேவை; அது அன்பு.

"அன்புற்று அமர்ந்த வழக்கு என்ப; ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு"

என்ற திருக்குறளை நோக்கி உணர்க. உயிரையும் உடம்பையும் செயற்பட வைப்பது அன்பே. அன்பின் செயற்பாடே உயிரின் செயற்பாடு எனக் கொள்ள வேண்டும்.

அன்பு பெருக வேண்டும். காட்சி முதல்நிலை. காட்சியின் மூலம் அன்பு செயற்படத் தொடங்கும். எனவே, முதற்செயலை உடம்பு தான் தொடங்கும். அன்பு மேன்மேற் பெருகுமாறு என் காட்சி அமையவேண்டும்.

அன்பானது பெருகிப் பெருகி, அலைத்து அலைத்து ஓடுவதாக அமையுமாறு காட்கி அமைய வேண்டும்.

தில்லையில் சிற்றம்பலத்தே நடைபெறும் கூத்தைக் காணுதல் வேண்டும். காட்சியானது கருத்தைத் தொட்டு அதனைச் செயற் படுத்த வேண்டும். மனத்தில் அதே நினைவு நீடிக்க வேண்டும். நினைவு நீடிக்க நீடிக்க அங்கே உணர்வு தோன்றும். உணர்வும் தடைப்படாதவாறு அந்நினைவை நீட்டிக்க வேண்டும். உணர்வு நீட்டிக்கும் போது நெகிழ்ச்சி அமையும். நெகிழ்ச்சி என்பது உயிரில் அமையும் உருக்கம்.

உருக்கம் அமையும் வரையில் உடலின் செயற்பாடு வேண்டும்.

உயிரில் நெகிழ்ச்சி அமைந்துவிட்டால், உடல் தன் முயற்சியை, செயலை நீட்டிக்க வேண்டியதில்லை. உயிரில் நெகிழ்ச்சி அல்லது உருக்கம் தொடங்கிவிட்டால், அந்த ஆன்ம உருக்கம் அன்பை ஆலிக்குமாறு செய்யும். ஆலித்தல் என்றால் பக்கங்களிற் பெருகி நிற்றல், அன்புமிகுதியாய்ப் பெருக்கெடுக்கும்போது அதுஉயிரையும்

உடலையும் இணைத்து நிற்பதாதலின், அது உயிரில் அருளை வெளிப்பட்டு நிற்கச் செய்யும். அவ்வாறே உடம்பில் கண்ணீரைப் பெருக்கெடுக்க வைக்கும். உயிரானது அருளில் நிற்பதை உணரும். உடம்பில் கண்ணீர் பெருகுவதால், உடம்பில் உள்ள தத்துவ அசுத்தக் கூறுகள் நீங்கி, அது பொன் மயமாகிய சுத்த தேகம் என மாற்றம் பெறும். கண்ணீர்ப் பெருக்கமும் உயிர் மாற்றமும் அமையும்.

காட்சியானது அன்பைத் தொட்டு, அன்பின் வெளிப் பாடானது நீடித்து, நீடித்து, ஆன்ம உருக்கம் வரை சென்று விட வேண்டும். ஆன்ம உருக்கம் உண்டாகும் வரை தான் காட்சி நீடிக்க வேண்டும். உடல், கண் முதலிய கருவிகளின் துணையெல்லாம், ஆன்ம உருக்கம் தோன்றும் வரை. அது அன்பை ஆலிக்குமாறு செய்துவிடும். அன்பு ஆலிக்கும் நிலை அமைந்து விட்டால் மற்றை யவை தாமே அமைந்து விடும். உயிரானது அருளில் இருப்பதை உணரும்; அருள் மயமாக ஆகும்; உடம்பில் கண்ணீர் பெருகிப் பெருகி, உடம்பு பொன்மயமாக மாறி விடும்.

உயிரும் உடம்பும் ஒரே சமயத்தில் ஆனந்தமாய்க் கசிந்து உருகும். அதனால், உயிரில் நின்ற அருள் வெளிப்படும். அதே சமயத்தில் உடம்பில் எலும்புகள் நைந்து உருகும். புலன்கள் ஒன்றும். வாய் நாதா என அரற்றி உரை தடுமாறும். உரோமம் சிலிர்க்கும். கரம் குவியும். இதயம் மலரும். கண் களி கூரும். அப்போது சுவைதரு கொம்புத் தேன் கொண்டு இந்த உடம்பை, இன்ப ஊற்றை அமைக்கும் யாக்கையாக மாற்றி அமைப்பான். அதனால் அற்புதமான இன்ப ஊற்றானது எலும்புத் துளை தொறும் சென்று உடல் முழுதும் பரவும். இன்பமே அன்பே நிறை யும் ஆக்கையாக இந்த உடல் அமையும். அப்போது என் வாழ்வு எத்தன்மைத்து?

**யான் இருப்பவன் ஆனேன்**

என்பது.

"அன்பினால் அடியேன் ஆவியோடு ஆக்கை
ஆனந்தமாய்க் கசிந்துருக
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்"

எனக் குறிப்பிடும் நிலை அமையும். அன்பின் பெருக்கத்தால், உயிரில் சிறிய அளவில் அருள் என நின்ற பரம் பொருள் விரிவு பெற்று உயிர் முழுவதையும் தன்னுடையதாக்கிக் கொள்கிறது. அந் நிலையில் உயிர் அருளாகவே விளங்குகின்றது.

திருவருளாக இறைவனாக விளங்கும் ஆன்மாவானது சிற்றம்பலத்தே நிருத்தமிடும் இறைவனுடன் ஒத்த நிலை பெற்று, நேர் நின்று, நேர்க்கண்டு, நேர்ப்படும் நிலையில் திருவருள் அனுபவம் அமைகிறது.

இதுவரை **அன்பு; அன்பு ஆலித்தல்; அருளாதல்** என்ற முறை அமையும்.

இனி, மீளவும் காட்சி அமைய வேண்டும் என்பதாக அடிக்கடி ஆர்வம் அமையும். அப்பொழுது முன்னுள்ள முறையிலேயே தொடர்ந்து சென்று, வான்நிலாவ வைக்கும் முறை அமையும்.

திருவருள் அனுபவம் அமையும் வரை முன்னுள்ள முறை அந் நிலையிலிருந்து நாதனின் திருவடியைப் பற்றிச் செல்லும் முறையை ஆர்வம் உண்டாக்கும். அதனால், அவன் அருள் அனுபவத்தோடு வான் நிலாவவும் வைப்பன். வான் நிலாவ வைத்தல் என்பது ஆன்மாவானது இறைவனுடைய தாளில் அடங்கி அது செல்லும் அளவுக்கு வியாபகப்பட்டு நிற்கும் நிலை.

இங்கே, இறைவன் திருவடி வியாபகத்தையும், அதனோடு இணைந்து நின்றமையாலே தாம் வியாப்பியமாக இணைந்து நின்ற நிலையும், அருளின் வியாபகமாக இறைவன் நிற்கும் நிலையும், அன்பின் பெருக்கத்தால் உயிர் அதனுடைய வியாப்பியமாக இணைந்து நிற்கும் நிலையும் அனுபவம் பெறும். இத்தகைய அனுபவமே **நட்பு நிலை அனுபவம்.**

## அன்பும் அருளும் நட்பும்

வேற்றுமைகள் பெருகி நிற்கும் எல்லாவற்றினும் இயைந்து நின்றும், அவைகளையெல்லாம் தத்தம் அளவில் நிற்குமாறு செய்வித்தும், அவற்றுள் இயைந்தும் தாக்குறாது நின்று, அவ்வவற்றைச் செயற்படுத்தியும், உடங்கியைந்து தம்முட்புணர்த்தியும், அவ்வந் நிலைகளில் அவ்வவற்றின் அனுபவங்களைக் கொடுத்தும், அவைகளையெல்லாம் வெறாது தன்னகப்படுத்தி மேற்பட்டு நிற்கும் வியாபகப் பொருண்மையின் உண்மை நிலை அனுபவம் பெறும். அதனையே அத்துவித நிலை அனுபவம் என்றும் **நட்பியல் நிலை** என்றும் கொள்ளல் வேண்டும். இந்நிலை அனுபவம் அமையும் போது, இது வரையில் தன்னுடன் மறைந்து மறைந்து நின்ற

கயமை முற்றாக நீங்கும். சால்பினை ஆளும் தன்மை எனப்பெறும் **நட்பியல்** நிலை அமையும் என்பது அருளனுபவத்தின் மேற்பட்ட இறையியலனுபவம். இதனை,

"அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு"

என்றும்,

"அன்பீனும் ஆர்வ முடைமை; அது ஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு"

என்றும், இருவகைத் தோற்ற விளைவுகளைத் தோற்றுவிக்கும் அன்பின் இலக்கணமும் விளக்கமும் என அமைத்துக் காணும் முறையில் விளக்கமுறுத்திக் கொள்ள வேண்டும்.

## நட்பியலுரை–விளக்கம்

மாபாடியத்துள், வன்மை மென்மை முறைபற்றி உரை வகுத்துக் காண வேண்டும் என வகைமைப்படுத்தி, அவ்வாறே திருமுறைகளையும் இதனோடு இது இவ்வாற்றாற் பொருள் காண வேண்டும் என வரையறை செய்தமைத்தலுக்கு உரிய அடிப்படை முறை **நட்பியலனுபவத்தால் போந்த நயம்** என உளங்கொள்ளு மாறு அமைத்துக் காட்டிய சிவஞான சுவாமிகளின் தெளிபொருள் நுட்பம் உணர்ந்து உணர்ந்து மகிழ்தற்குரியதாம்.

இனி, **நட்பியலுரை** என்ற அனுபவநிலையை விளக்கு முகத் தாலேயே சிவஞான போத மாபாடியவுரை விளங்குகின்றது என்பது உண்மையே. ஆயினும் அதனைத் தெள்ளத் தெளிய விளக்கும் வகையில் அமைந்த இடம் ஒன்றைச் சுட்டி விளக்கினால் இத்தலைப்புக்குரிய பொருண்மை நிறைவுற்று விளங்குவதாகும்.

இடையில் குறிக்கொண்டு காக்க வேண்டுவதாம் சிறப்பு ஒன்றையும் கருதி முடித்தல் கடன் ஆகும்.

## நட்பியலனுபவ விளக்கமே சோமேசர் முதுமொழி வெண்பா

சிவதத்துவ விவேகம் என்ற நூலின் அடிப்படையில் வடமொழியில் வரும் சிவபரத்துவ வசனங்களுக்கெல்லாம் உரை விளக்கம் கண்டமை போலவே-**நட்பியலுரை** கண்டமை போலவே, திருக்குறளுக்கும் **நட்பியலுரை** வரைந்த நிலைமையில் தோற்றம் பெற்ற முழு நூலே **சோமேசர் முதுமொழி வெண்பா** என்பதை உணர்ந்து தெளிதல் வேண்டும்.

**சோமேசா**

அறம், பொருள், இன்பம் என்னும் முக்கூற்று ஒரு பொருண்மைத்தாம் திருக்குறளுக்கு வரலாற்று விளக்கம் அமைத்தார் என்பது வரலாறு.

திருவள்ளுவரின் நிறைமொழியாம் திருக்குறள் மேற்பக்கம்; வரலாறு ஒன்றை அதை ஒத்த நிலையில் அமைத்து ஒரு குறட்பாவைப் போலவே கீழ்ப்பக்கம் அமைத்து நிறுத்துதல். மேல் உள்ளது ஒலி விளக்கம்; கீழே உள்ளது பொருள் விளக்கம் அல்லது வரலாற்று விளக்கம். இரண்டும் தனித்தனி நின்றால் இரட்டைக் குறள் வெண்பா. குறள் இரண்டு; ஒலியும் நிகழ்வுமாகிய செய்தி இரண்டு. இவ்வாறான இரட்டைகள் முற்றாக மாற்றம் பெற்று "வெண்பா" என்ற ஒன்றே மலர்கிறது. இத்தகைய ஒருமையை நல்கிய ஆற்றல் எதற்கு? ஒலியாய் நின்ற மொழியையும், வரலாறாக நின்ற மொழியையும் ஒன்றாக இணைத்து மாற்ற முறுத்திய பெருமை 'முதுமொழி' என்ற ஒன்றற்கே உண்டு என்றார். (ஸ + உமா + ஈசா = சோமேசா)

இரண்டு குறள் வெண்பாக்களை இணைத்து நிறுத்தி ஒரு நேரிசை வெண்பாவாக அமைக்க வேண்டுமாயின் இடையே 'ஆசு' அமையும். ஆசு என்பது ஒற்றுமைப்படாத இருமைகளை இணைத்து நிறுத்தும் ஆற்றல் வாய்ந்த மொழியே 'ஆசு' என நின்று இணைப்பது. அவ்வாறே உமா- ஈசா என்ற இரண்டையும் இணைத்த சத்யமாக, இரண்டையும் கடந்த சத்யமாக நின்ற மொழியேமுதுமொழி. அதுவே 'சோமேசா' என்பது. இருமைகளை இணைத்த பெருமையுடைய சத்யம் என நின்ற மூன்றாம் நிலை; இரண்டையும் கடந்த முதுமை நிலை என்பதைக் குறிக்கும் முதுமொழி. உமா-ஈசா என்ற இருமையை இணைத்த இருமையைக் கடந்த 'ச' என்பதே முதுமை நிலையாயிற்று.

எனவே, **சோமேசர் முதுமொழி வெண்பா** என்பதே ஒலியையும் பொருளையும்; ஒலியையும் வரலாற்று நிகழ்வையும் இணைத்து நிறுத்திக் கடந்த முதுமொழியாய் நின்ற ஒன்று உண்டு என்பதையும்; அதுவே இருமைகளை இணைத்து நிறுத்துவது என்பதையும்; அதுவே இருமையை நோக்க முதுமையானது என்பதையும் உணர்ந்து தெளியும் வகையில் சோமேசர் முதுமொழி வெண்பாவை அமைத்தார்.

இதனடிப்படையில் முதற்குறளுக்கு விளக்கம் கூறி, அதன் மூலமாக, சிவஞான போதத்தின் முதல் நூற்பாவின் மூன்றாம் அதிகரணத்து உரையையும் அமைத்துக் காட்டும் சிவஞான சுவாமிகளின் நட்பியலுரை அனுபவம் அறிந்து மகிழ்வதற்குரியது.

## சிவஞானபோத முதல் நூற்பாக் கருத்து

நம் கண்ணுக்குப் புலனாகும் இவ்வுலகம் பொருள்களின் அடிப் படையில் ஆய்வதற்குரியது. உயிர்ப்பொருள் உயிரில் பொருள், பருப்பொருள் நுண்பொருள், அசையும் பொருள் அசையாப் பொருள் இவ்வாறு பலவாகப் பகுத்து நோக்கப் பெறும்.

நம்முடைய ஆய்வுக்கு ஏற்ப, இவ்வுலகம் முற்றும் அவன், அவள், அது என்று குறிக்கப்பெறும் பொருள்களின் தொகுதியே என்பது தெளிவாம். ஆணும் பெண்ணுமாய்ப் பலர் கூடியிருக்கும் இடம் அவை எனப்பெறுதல் உலக வழக்கு. மெய்கண்டாரும், இவ்வுலகை, "அவன் அவள் அது என்னும் மூவகைப் பொருளும் கூடி இயன்றுள்ள அவை" என்று அறிமுகப்படுத்துகின்றார்.

மக்கள் வந்து கூடுங்கால் அவை உண்டு. அவர்கள் பிரிந்து போனால் 'அவை' என்பது இல்லை. ஒருவர் முன்னின்று மக்கள வையைக் கூட்டுகின்றார். அவை சிலநேரம் இருக்கிறது. பிறகு பிரிந்து விடுகிறது. மீளவும் கூட்டப் பெறலாம். இதனையே மெய்கண்டார்,

"அவனும் அவளும் அதுவும் ஆகிய பொருள்கள் கூடியிருக்கும் அவையானது தோன்றுதல் இருத்தல் இல்லாது போதல் என்ற மூவகை நிலைகளைக் கொண்டிருக்கிறது. ஒருவர் கூட்டக் கூடும் அவைபோல, இவ்வுலகமும் ஒருவரால் உண்டாக்கப் பெற, அழிக்கப் பெற, அழிக்கும்வரை நிலைத்தல் பெற இவ்வாறு முத்தொழிற் பட்டு இயங்குவது என்று குறிப்பிட்டார்.

அவையிலுள்ளோர் பிரிந்தபோது அவரவர் வீடுகளுக்குச் சென்றுவிடுவர். மீண்டும் அழைத்தால் எந்த வீடுகளில் சென்று தங்கினார்களோ அங்கிருந்தே மீள வருவர். முன்னே கூடிய அவை, பிரிந்து மீளவும் கூடுகிறதென்றால் முன்பேயே முடிவுபெறாத பணி காரணமாக மீண்டும் அவை கூடுகிறதென அறியலாம்.

மேலே காட்டப்பெற்றவைகளைத் தொகுத்து அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

உலகம் உயிரும் உயிரில் பொருளுமாகக் காட்சி அளிக்கிறது. அதுவே உலகப்படைப்பு.

உயிர்கள் என்றும் உண்டு, அவைகளுக்கு உடல் முதலிய வற்றை அமைத்துக் கொடுப்பதுதான் படைப்பு.

உயிர்களுக்கு ஏதோ குறை இருக்கிறது. அதனாலேயே அவை பல முறையும் உடம்பை எடுத்துப் பயிற்சி பெறுகின்றன.

உலகம் தோற்றம் கொள்ள, நிற்க, மறைய, பின்னும் தோன்று வதற்கு ஒரு குறிக்கோள் உண்டு,

உயிரில் பொருள்களே மாற்றம் உறுகின்றன. அவை ஒடுங்கு வதும் தோன்றுவதும் ஓரிடத்தில்தான்.

உலகை ஒடுக்க, மீண்டும் தோற்ற இவ்வாறு செயல்படுத்து வான் ஒருவன் உளன். இவைகளை முறையுற அமைப்பதே மெய் கண்டாரின் முதல் நூற்பாவாக அமைகிறது.

## நூற்பாவின் மூன்றாம் செய்தி

முதல் நூற்பாவின் பொதுக்கருத்து மேலே அமைக்கப்பெற்றது. முதல் நூற்பாவில் உலகினைக்கொண்டு, அது செய்வோனை உடைத்து என்பதை நிறுவும் செய்தி முதல் இரண்டு அதிகரணங் களிலேயே முடிந்து விடுகின்றது.

மூன்றாம் அதிகரணமாகி நிற்பது "அந்தம் ஆதி" என்பது. "அந்தம் ஆதி" என்பதால் சிவஞானமுனிவர் குறிப்பிட எண்ணும் கருத்து ஒன்று உண்டு. அது ஒரு பொதுமை நியதி எனக் கொள்ள வேண்டும்.

உலகத் தோற்றம்பற்றிக் கூறுகின்ற பகுதிகளாக வேதம் உபநிடதம் ஆகியவைகளில் வருபவைகளையும் அவைகளுக்கு எழுதும் விளக்கங்களையும் மனத்துட்கொண்ட சிவஞானமுனிவர் "அந்தம் ஆதி" என்ற நூற்பாவை "அந்தமே ஆதி" என்று ஏகாரம் அமைத்துக் கொண்டு, ஏகாரம் நூற்பாவாதலின் தொக்கது எனக் கூறிக்கொண்டு ஒரு கருத்தை விளக்க முற்படு கின்றார்.

தோற்றுவிக்கும் நிலை முன்னதாகவும், அழிக்கும் நிலை பின்னதாகவும் அமைத்து விளக்கம் கூறும் பொதுவகையை எடுத்துக்

கொண்டு அழித்தலே முதல் என்பதாக அமைத்துக் காட்டுகின்றார். அழித்தலே முதல் என்ற கருத்தை, சிவன், சங்காரகாரணன் என்ற அடிப்படையில் சிவபரத்வம் கூறும் வகையில் மட்டும் சிவஞான முனிவரின் விளக்கம் அமைந்துவிடவில்லை. தமிழக மரபுக்கொத்த நீண்ட நெடும் பழமை யுரிமையுடைய சிந்தனையின் விளைவாக அமைத்தே தத்துவ உலகிற்கு வழங்குகின்றார் சிவஞானமுனிவர்.

## தொல்காப்பியவழியில்

தொல்காப்பியத்தில் முதற்பொருள் என நின்றவை இடமும் காலமும் மட்டுமே. இடமும் காலமும் இணைந்து நிற்கின்றன. இவை இரண்டுடன் வினைமுதலாம் பொருளொன்றும் இருக்கின்றது. மூன்றும் தத்தம் அளவில் நிறை உள்பொருளாக அமைகின்றன.

உலகத்தோற்றம் அமைவதற்கு இடம் கொடுப்பனவாய் அமையும் நிலையில் அவைகள் உள்ளன எனக் கொள்ளலாமேயன்றித் தோற்றம் கொண்டன என்று சொல்ல இயலாத நிலை.

தோற்றுவிப்பவன் எனக் கொள்ளத்தகும் முதல்வனும் மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என நிற்கவில்லை.

நிறைந்து நிற்கும் நிலையை, எந்த ஒரு தோற்றமும் கொள்வதற்கு முன் உள்ள நிலையை இறைமை என இறைவனுக்கும் உலகம் எனப் பிரபஞ்சத்துக்கும் அமைத்துக் கண்டும், இணைத்துச் சிந்தித்தும் அமைந்த நிலை சங்ககாலத் தமிழ் மரபு நிலை.

உலகத்தோற்றம் பற்றிப் பேச முற்படும் போது, முதலில், ‘இறை’ என்ற பொதுநிலையை ‘இறு’ என்ற பகுதியின் அடிப்படையில் ‘அழிப்பது’ என்பதாக அமைத்துக் கொள்ளுகின்றது.

இறை என்பதையே பகுதியாகக் கொண்டு நின்ற நிறை நிலையானது, ‘இறு’ என்ற பகுதியாக நிறுத்தி அந்த நிலையை அழித்த போதே மாயோன் என, சேயோன் என, வேந்தன் என, வருணன் என அமையும் நிலை உருப்பெறுகிறது.

மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்

தோன்றின எனக் கூறும் தொல்காப்பிய நூற்பாவின் கருத்தானது இறையும்; காலமும் இடமும் இணைந்த உலகமும்; நீக்கமற நிறைந்து இறை என்றும் உலகம் என்றும் இருந்த முதன்மை நிலை அழிக்கப் பெற்ற போது.

நால்வரைப் பொருந்திய நான்கு உலகம் தோற்றப் பெற்றன என்று கொள்ளும் சிந்தனையின் வலிமையை உணர்ந்து ''அந்தத்தைச் செய்ததே முதல்'' என்ற கருத்தில் ''அந்தமே ஆதி'' என வரையறை செய்தார்.

இதனைத் திருவருட்பயன் ஆசிரியர் சைவசித்தாந்த மரபை மீறுவார் போலவே 'பதிமுதுநிலை' என்ற தலைப்பை அமைப்பதன் மூலம் தெளிய உணர்த்தினார்.

''அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறை நிற்கும் நிறைந்து''

என்ற முதற் குறளில், அகரம் என்பதை எழுத்து எனக்கொள்ளாமல் எங்கும் நிறைந்து நிற்கும் இறைமை நிலையைக் குறிக்க வந்த குறிப்பாகவே கொள்கிறார்; அந்நிலையை மேலும் குறிப்பிட வேண்டுமானால் அகரம் போன்ற எழுத்தொலிகள் தோன்ற இடம் கொடுக்கும் மூல உயிர்மை ஒலி நிலையே. அவ்வாறு நிறைந்து நிற்கும் இறைமை ஒலித்தன்மையை அழித்தநிலையில் முதல் நின்ற எழுத்தே 'அ' என்பதாயிற்று. இறைமை ஒலியை அந்தம் ஆக்கிய 'அ' என அதனைக் கொள்ளவேண்டும் என்பதே கருத்து.

நிறைந்து நிற்றல் என்ற இறைமையை இறுத்ததே முதல் என்ற பொருளில் சங்காரமே முதல் எனப் பெறுவதாயிற்று.

இவ்வகையில், தோற்றம் கூறி, இறுதிகூறும் அமைப்பைக் கொண்டவைகள் என விளங்குகின்ற உபநிடத விளக்கங்களெல்லாம் புனருற்பவங்களைக் கூற வந்தவைகள் என்றும். ''அந்தமே ஆதி'' எனநின்றதே ''இறைமையை இறுத்து நின்ற ஆதி'' என்னும் பொருளில், ''அந்தமே ஆதி'' என்பதற்கு விளக்கம் அமைத்துக் காட்டினார் சிவஞான முனிவர். அது சங்காரகாரணன் என்ற அடிப்படையில் சிவன் என்பதைக் குறிக்கும் வழக்குண்மையால் சிவபரம் பொருள்பற்றிய விளக்கமாகவே அனைவரும் கொள்ளும் நிலை உண்டாயினமையால், சிவஞானமுனிவர் வரைந்து கூறிய நட்பியலுரை அறிஞர்களாற் பெரிதும் போற்றிக் கொண்டாடப் பெறாத நிலையில் அமைந்து விட்டது. இதற்காகச்

சிவஞான முனிவர் அபூர்வவிதி, நியமவிதி, பரிசங்கியாவிதி என்ற மூன்றையும் விரிவாகச் சொல்லி அமைத்தும், திருவருட்பயன் முதல் அதிகாரம் பதிமுதுநிலை என அமைக்கப்பெற்றும் அதன் நுட்பம் அமையாது போனமை போன்றே சிவஞான முனிவர் ''அந்தமே ஆதி'' என ஏகாரம் அமைத்து எழுதிய நட்பியலுரையும் அறிஞர் பெருமக்களால் சிறப்புற எடுத்துப் பேசப்பெறாது அமைந்து போயினமை வருந்துதற் குரியதே.

சிவஞான முனிவரின் இக்கருத்து, சோமேசர் முதுமொழி வெண்பாவின் முதற்குறள் விளக்க அடிப்படையை ஒரு முறை உணர்ந்து படித்தார்களானால், அவர் அங்கே அத்தகைய வெண்பாவை அமைத்ததன் நோக்கம் மாபாடியத்தில் இன்ன இடத்தில், இன்ன பொருளை, இதனை அமைப்பதற்காகவே என்பதை உணர வாய்ப்பு அமைந்துவிடும்.

''சீர்கொள் இறை ஒன்றுண்டு அத்தெய்வம் நீ என்று ஓப்பாற்
சோர்வில் அடையால் தெளிந்தோம் சோமேசா—ஓரில்
அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்பதே சோமேசர் முதுமொழி வெண்பாவின் முதற்பாட்டு. இதனுள் முதலிரண்டு வரிகளின் பொருளை அமைத்துக் காணுதல் வேண்டும்.

இங்கே, திருக்குறளை, அகரமுதல எழுத்தெல்லாம் என ஒரு பகுதியாக, ஆதிபகவன் முதற்றே உலகு என ஒரு பகுதியாகத் தனித்தனியே நிறுத்திக் கொள்ளவேண்டும்.

அப்படிநிறுத்திக் கொண்டதும், அவைகள் நின்றநிலை. சோர்வில் அடைமொழி பெற்றநிலை என்ற இரண்டு காரணங்களால் இரண்டு முடிவுகளை நாங்கள் தெரிந்துகொண்டோம் என்கின்றார்.

''ஒப்பால், சோர்வில் அடையால்'' என்ற தொடர்களுக்கு நாம் பழக்கவழியிற் பொருள் கொள்ளலாகாது. இங்கே எடுத்துக் காட்டுவமை அணி அன்று. ஒப்புமை அன்று.

இரண்டு நிலைகளை ஒப்பநிறுத்திய நிலை
ஒலியையும் பொருளையும் ஒப்ப நிறுத்திய நிலை

அகர முதல எழுத்தெல்லாம் என்பதை ஒலி நிலையில் நிறுத்திக் காட்டியமைக்கு ஒப்பவே பொருள் நிலையையும் ஆதிபகவன் முதற்றே உலகு என்று ஒப்ப நிறுத்தியநிலை.

அதைஅவ்வாறுதான் அமைக்க வேண்டும் என்ற குறிப்பை **'அத்தெய்வம் நீ'** என்பதாற் பெற வைத்தார்.

உமா—ஈஸ என இருமைப்படுத்தி ஒப்ப நிறுத்தினபோது, இரண்டையும் இணைத்துக் கடந்த சத்தியத்தன்மை எனப்பெறும் 'இறைமை' ஒன்று உண்டு என்பது உம்முடைய பெயராலேயே அறிந்தோம். அதுவே, இருமையைக் கடந்த இறைமை - ஸ என நின்ற சத்தியநிலைமை என்றும், அதனை அழித்த நிலையில் நின்ற இருமையே உமையாகவும் ஈசனாகவும் அமைந்த நிலை என்பதை அறியமுடிந்தது என்றும், இவ்வாறு ஒப்பநிறுத்திய நிலையில் இரண்டையும் இணைத்துக் கடந்த முதுமை நிலை ஒன்று உண்டு என்பதும், அது தெய்வம் என்பதும், அத்தெய்வம் 'சோமேசா' என்பதும் காண முடிந்தது என்றும் அமைத்துக் காட்டிய நுட்பம் உணர்ந்து போற்றுதல் வேண்டும். எனவே 'இறைமைநிலையை இறுத்துநின்றதே முதல்' என 'அந்தமே ஆதி' என்பதற்குப் பொருள் காண வேண்டும் என்றும் அமைத்துக் காட்டியது நட்பியலனுபவம் சான்ற நட்பியலுரைக்கு ஒரு சிறந்த சான்றாக அமையும்.

சோமேசர் முதுமொழி வெண்பாவும் அத்தகையதொரு தத்துவப் பின்னணி தோன்ற அமைத்து அருளப்பெற்ற நட்பியல னுபவப் பனுவல் எனக் கருத்திற் கொண்டு பயிலுதல் வேண்டும்.

## முடிப்புரை

மேலே எடுத்துக் காட்டப் பெற்றவற்றின் அடிப்படையில் மாதவச் சிவஞான சுவாமிகள் தமிழக மரபுக்கே உரியவகையில், சைவசித்தாந்தச் செம்பொருள் நெறிக்கோர் மூலக்கல்லாக நின்று விளங்கும் **"நட்பியல் உரை"** என்ற கொள்கையை அனுபவ அடிப் படையில் விளக்கமுற அமைத்துக் கொண்டார்கள் என்பதும், அதனை அவர்கள் எடுத்துக் காட்டிச் சுட்டிக் கூறிய இடம் சிவ தத்துவ விவேகம் என்பதும், நட்பியலுரை என்பதன் விளக்கத் தைத் திருக்குறள் அடிப்படையில் காணவேண்டும் என்பதும், அது ஒருவகைப் பொதுமை அனுபவம் என்பதும், பல்வேறு மாறுபட்ட

கருத்துக்களை இணைய நிறுத்தி ஏற்கும் ஒருவகைப் பொதுமைக் கொள்கை நட்பியல் அனுபவத்தால்தான் மலரும் என்பதும் அது அன்பின் முதிர்ச்சியாம் அருள் என்பதோடு நின்றுவிடுவதன்று என்பதும், அன்பு, ஆர்வம் எனப் பெருகி, பின்பு நட்பு என மலரும் என்பதும், அதனால் 'கயமை' என்ற மாபெரும் அறியாமை நீங்கும் என்பதும், அவ்வகை அனுபவநிலையே மாபாடியம் அமைப் பதற்கு மூலமாக நின்ற அனுபவம் என்பதும், நட்பியல் அனுபவ அடிப்படையில், அனைத்து வகையான முரண் கருத்துக்களையும் இணைத்து நிறுத்தி மேல்நிலைக் கொள்கையை அமைக்கமுடியும் என்பதும், அவ்வாறு மலர்ந்த கொள்கைகளுள் ஒன்றே 'அந்தம்ஆதி' என்பதற்குச் சிவஞான முனிவரால் அமைக்கப்பெற்ற விளக்கம் என்பதும், சிவஞான முனிவரின் அத்தகைய நட்பியலனுபவ விளக்கத்தின் முதன்மை மலராய் மலர்ந்த பெருமை சோமேசர் முதுமொழி வெண்பாவுக்கு உண்டு என்பதும் நிறுவப்பெற்றன.

அகர முதல எழுத்தெல்லாம் என்பதை ஒலிநிலையில் நிறுத்திக் காட்டியமைக்கு ஒப்பவே பொருள் நிலையையும் ஆதிபகவன் முதற்றே உலகு என்று ஒப்ப நிறுத்தியநிலை.

அதைஅவ்வாறுதான் அமைக்க வேண்டும் என்ற குறிப்பை **'அத்தெய்வம் நீ'** என்பதாற் பெற வைத்தார்.

உமா—ஈஸ என இருமைப்படுத்தி ஒப்ப நிறுத்தினபோது, இரண்டையும் இணைத்துக் கடந்த சத்தியத்தன்மை எனப்பெறும் 'இறைமை' ஒன்று உண்டு என்பது உம்முடைய பெயராலேயே அறிந்தோம். அதுவே, இருமையைக் கடந்த இறைமை - ஸ என நின்ற சத்தியநிலைமை என்றும், அதனை அழித்த நிலையில் நின்ற இருமையே உமையாகவும் ஈசனாகவும் அமைந்த நிலை என்பதை அறியமுடிந்தது என்றும், இவ்வாறு ஒப்பநிறுத்திய நிலையில் இரண்டையும் இணைத்துக் கடந்த முதுமை நிலை ஒன்று உண்டு என்பதும், அது தெய்வம் என்பதும், அத்தெய்வம் 'சோமேசா' என்பதும் காண முடிந்தது என்றும் அமைத்துக் காட்டிய நுட்பம் உணர்ந்து போற்றுதல் வேண்டும். எனவே 'இறைமைநிலையை இறுத்துநின்றதே முதல்' என 'அந்தமே ஆதி' என்பதற்குப் பொருள் காண வேண்டும் என்றும் அமைத்துக் காட்டியது நட்பியலனுபவம் சான்ற நட்பியலுரைக்கு ஒரு சிறந்த சான்றாக அமையும்.

சோமேசர் முதுமொழி வெண்பாவும் அத்தகையதொரு தத்துவப் பின்னணி தோன்ற அமைத்து அருளப்பெற்ற நட்பியல னுபவப் பனுவல் எனக் கருத்திற் கொண்டு பயிலுதல் வேண்டும்.

## முடிப்புரை

மேலே எடுத்துக் காட்டப் பெற்றவற்றின் அடிப்படையில் மாதவச் சிவஞான சுவாமிகள் தமிழக மரபுக்கே உரியவகையில், சைவசித்தாந்தச் செம்பொருள் நெறிக்கோர் மூலக்கல்லாக நின்று விளங்கும் **''நட்பியல் உரை''** என்ற கொள்கையை அனுபவ அடிப் படையில் விளக்கமுற அமைத்துக் கொண்டார்கள் என்பதும், அதனை அவர்கள் எடுத்துக் காட்டிச் சுட்டிக் கூறிய இடம் சிவ தத்துவ விவேகம் என்பதும், நட்பியலுரை என்பதன் விளக்கத் தைத் திருக்குறள் அடிப்படையில் காணவேண்டும் என்பதும், அது ஒருவகைப் பொதுமை அனுபவம் என்பதும், பல்வேறு மாறுபட்ட

கருத்துக்களை இணைய நிறுத்தி ஏற்கும் ஒருவகைப் பொதுமைக் கொள்கை நட்பியல் அனுபவத்தால்தான் மலரும் என்பதும் அது அன்பின் முதிர்ச்சியாம் அருள் என்பதோடு நின்றுவிடுவதன்று என்பதும், அன்பு, ஆர்வம் எனப் பெருகி, பின்பு நட்பு என மலரும் என்பதும், அதனால் 'கயமை' என்ற மாபெரும் அறியாமை நீங்கும் என்பதும், அவ்வகை அனுபவநிலையே மாபாடியம் அமைப்பதற்கு மூலமாக நின்ற அனுபவம் என்பதும், நட்பியல் அனுபவ அடிப்படையில், அனைத்து வகையான முரண் கருத்துக்களையும் இணைத்து நிறுத்தி மேல்நிலைக் கொள்கையை அமைக்கமுடியும் என்பதும், அவ்வாறு மலர்ந்த கொள்கைகளுள் ஒன்றே 'அந்தம்ஆதி' என்பதற்குச் சிவஞான முனிவரால் அமைக்கப்பெற்ற விளக்கம் என்பதும், சிவஞான முனிவரின் அத்தகைய நட்பியலனுபவ விளக்கத்தின் முதன்மை மலராய் மலர்ந்த பெருமை சோமேசர் முதுமொழி வெண்பாவுக்கு உண்டு என்பதும் நிறுவப்பெற்றன.

"நண்ணும் பொருள்மூன்றும் நானறிந்து நானறஎன்
கண்ணும் தனதாகக் காட்டினான் - வெண்ணெயிலே
மெய்கண்ட தேவனொரு மெய்கொண்டு வந்திலனேல்
பொய்கொண்டு போமே புவி"

**சிவஞானபோதம்** என்பதன் பொருள்

"என்றலுமே சிவமேது ஞானமேது இங்கு
இயம்பியிடும் போதமேது இயம்புவீரேல்
அன்றுவட நீழலில் வந்திருந்தார் நீரே
அடியேனும் உமக்கடிமை ஆவேன் என்ன
**நின்றசிவம் ஒன்று அதனைத் தேர்தல் ஞானம்**
**நிகழ்போதம் தேர்ந்ததனைத் தெளிதல் ஆம்** என்று
ஒன்றியநற் பொருள் வினவி நிற்பார் சிந்தை
உருகும்வகை உரைசெய்தார் உவமையில்லார்"

மேலே குறிப்பிடப்பெற்ற நான்கும் வாதவூரடிகள் புராணத்தைச் சேர்ந்தவை.

அடுத்து, வித்துவான் **கா. மு. சுந்தரமுதலியார் அவர்கள்** சிவஞானபோதம் பற்றி எழுதிய குறிப்பொன்று, தருமையாதீனப் பதிப்பாகிய, **மெய்கண்ட சாத்திரங்கள்** என்ற நூலின் 67ம் பக்கத்தில் கீழ்க்கண்டவாறு அமைக்கப் பெற்றுள்ளது.

"இச்சிவஞானபோதம், சிவபெருமான் திருக்கரத்துட் கொண்டது. நந்தி தேவருக்கும், சனகாதிகளுக்கும், மாணிக்க வாசக சுவாமிகளுக்கும் உபதேசிக்கப் பெற்றது. சிறந்த சைவ சித்தாந்த ஞான முழுமுதல் நூலாய் விளங்குவது. விரிந்த பொருள்களையுடையது. எந்நூற்களிலும் இல்லாத மேலான விஷயங்களைத் தன்னகத்துட் கொண்டது. பன்னிரண்டு நூற் பாக்களையுடையது; நாற்பது அடிகளுடையது; இருநூற்றுப் பதினாறு சொற்களுடையது; அச்சொற்களுள் அறுநூற்று இருபத்து நான்கு எழுத்துக்கள் பெற்றது. ஒவ்வொரு வீட்டிலும் பூசித்துப் போற்றப் படுவது. ஒவ்வொருவரும் படித்துச் சிந்தித்துத் தெளிந்து முடிவான அத்துவித முத்தியைப் பெறுவதற்குரியது. சிவஞான சுவாமிகளால் சிற்றுரையும் பேருரையாகிய மாபாடியமும் எழுதப் பெற்றது. **எவர்களாலும் மறுக்கப்படாதது** எச் சமய நூல்களுக்கும் அரசாய் விளங்குவது"

இனி, **மெய்கண்டாரும் சிவஞானபோதமும்** என்றதொரு செந்தமிழ் ஆய்வு நூலைத் திட்பமும் நுட்பமும்செறிய யாத்துத்

தந்த கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் மெய்கண்ட தேவரின் காலத்தைக் கல்வெட்டு முதலியன கொண்டு நிறுவியதோடன்றி, **மெய்கண்டார் ஆண்டு** என்ற கணக்கு ஐப்பசி மாதச் சுவாதி முதலாகக் கொண்டு தொடங்கப் பெற்றதற்கான சான்று உண்டு எனவும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். அத்தகைய நாள் சித்தாந்த சைவர்களின் பொற்காலமாக இருந்திருத்தல் வேண்டும். மேலும்,

"ஆதிமறைக் கருத்துக்களைச் சிறுபான்மை உள்ளடக்கிய வடமொழி உபநிடதங்களுட் போந்த 'அத்துவிதம்' என்னும் சொல்விற்குப் பொருள் இன்னதென்று தெரியாமல் அறிவு நூல் கற்போர் பலரும் மயங்கித் தியங்கினர். அம்மயக்கந் தீர்த்தற் பொருட்டும் சிவபெருமானது திருவருளினால் மெய்கண்ட சந்தானம் இத்தமிழ் நாட்டில் ஏற்பட்டதாகத் தெரிகின்றோம்.

"நல்வியாத முனியுரைசெய் சூத்திரத்தின்
பாடியமோர் நான்குங் கொண்ட
சொல்வாய்மை பொருள்வாய்மை தெளிதலுற்றது
ஓராது சோக முற்றோர்
எல்லாரும் அத்துவித சுத்தநிலை
இனிதெய்திச் சோக மேயப்
பொல்லாத சமயிகளும் அதிசயிப்பப்
புவனிமிசைப் **போத** மேற"

என்று சந்தானாசாரிய புராண சங்கிரகத் திருப்பாட் டொன்றைச் சான்று காட்டி "அத்துவித விளக்கம்" அமைத்தது சிவஞான போதத்தின், மெய்கண்டாரின் தனிச்சிறப்பு" என்பதாகத் திரு. எம். எல். பிள்ளையவர்களே அமைத்துக் காட்டியுள்ளார்கள்.

இவ்வாறு '**சிவஞானபோதம்**' என்ற ஒரு பெயராலேயே இத் தத்துவக் கொள்கை பேசப்பெற்று வருகிறது என்கிற மரபு முறையை ஆய்வின் அடிப்படையில் மட்டுமேயன்றி அருள் உணர்வுடனும் நோக்குகின்றார் சிவஞானமுனிவர்.

அடுத்து **மெய்கண்டான்** என்ற சொல்லாட்சியையும், அப் பெயர் பற்றி வரும் விளக்கங்களையும் தம்மகத்தே கொண்ட தோடு, மெய்கண்டாருக்குக் காலத்தால் முன்னும் பின்னுமாக அமைந்த சாத்திர நூல்கள் பதினான்கையும் **மெய்கண்ட சாத்திரம்** என மெய்கண்டார் பெயரை முன்னிட்டுக் கொண்டே தொகுத்தமைத்துள்ள மரபு முறையையும் செவ்விதின் நோக்குகின்றார் சிவஞானமுனிவர்.

இந்நூலின் தோற்றுவாயில் எடுத்துக் காட்டியது போல் பூர்வ பட்சம் செய்து சித்தாந்தம் செய்தல் எல்லாத் தத்துவக் கொள்கை களுக்கும் பொதுவான ஒன்றாக இருப்பவும், சித்தாந்தம் என்ப தையே இயற்பெயராகக் கொண்டு விளங்கும் இத்தத்துவக் கொள்கையின் உயிர் நாட்டம் எந்த இடத்தில் வேரூன்றி இருக் கிறது என்பதையும் நுனித்து நோக்குகின்றனர். இன்று வரையில் வேண்டுமானால் மறுக்கப் பெறாமல் இருக்கலாம். இனியும், என்றும் மறுக்கப் பெறா முடிவுகளே இவை என்று திண்ணமாக எப்படிக் கூறமுடியும் என்ற அடிப்படையில் ஆய்ந்து, இக்கொள்கை இன்றும், என்றும் சித்தாந்தமே என்று நிறுவிக் காட்டுதற்குரிய காரணத்தையும் மாதவச் சிவஞான சுவாமிகள் ஆய்ந்து தெளிந் திருத்தல் வேண்டும்.

மேலே எடுத்துக்காட்டப்பெற்ற குறிப்புக்களின் அடிப்படையில் மாபாடியத்தை வரையறைப் படுத்தி அமைத்ததோடு **சிவதத்துவ விவேகத்தில்** ஒரு குறிப்பையும் அருளியுள்ளார்.

**சிவதத்துவ விவேகம்** பற்றிய விளக்கம் முன்பேயும் காட்டப் பெற்றுள்ளது. சிவதத்துவ விவேகத்துள் முதல் நிலைப் பாயிரம் எனச் சிவஞானசுவாமிகள் தாம் அமைத்த ஏழு பாட்டுக்களில், ஏழாவது பாட்டில் **நட்பியலுரை** என்பதை அமைத்துக் காட்டியமை போன்றே அதற்கு முன்னின்ற ஆறாவது பாட்டில் முதல் வித்தை என்ற ஒன்றை எடுத்துக்காட்டி **முதல்வித்தை** உலகில் ஓங்கிச் சிறப்புற்று விளங்கவேண்டும் எனவும் வாழ்த்து அமைத்துக் கூறுவதாக அப்பகுதி அமைகிறது.

**சிவதத்துவ விவேகத்துள்** சிவஞானசுவாமிகள் ஆறாவது பாட லிற்குறிப்பிட்டுக் காட்டும் **முதல்வித்தை** பற்றிய ஆய்வினைத் தன்னகத்துக் கொண்டு விளங்குவதே இப்பகுதி.

## வித்தை என்பதன் பொருள்

வித்தை என்ற சொல் பொதுவாக ஞானம் என்பதைக் குறிக்கும். பரஞானம், அபரஞானம் என்பனவும் பரவித்தை அபர வித்தை எனக் குறிக்கப்பெறும் வழக்குண்மையைக் காணலாம்.

வித்தை என்பதை ஞானம் பெறுவதற்குரிய வழி என்ற வகை யிலும் எடுத்தாளும் நிலை உண்டு. வகரவித்தை எனவும் தகர வித்தை எனவும் வழங்குப. வகரத்தால் முடிக்கும் ஞானம் என்றும்

தகரத்தால் முடிக்கும் ஞானம் எனவும் விளக்கம் அமைப்பர். உபாசனை முறைகளையும் 'வித்தை' என்ற சொல்லால் குறிப்பிடும் வழக்கு உண்டு.

சிவாகமங்களிற் பொதுவாக முப்பத்திரண்டு வித்தைகள் உண்டு என நீலகண்ட பாடியத்தில் எடுத்துக் காட்டப் பெற்று அவற்றுள் சிறந்தது தகரவித்தை என்று சுட்டப்பெறுகிறது.

1. காயத்ரி வித்தை
2. அட்சி வித்தை
3. ஆதித்ய வித்தை
4. மதுவித்தை
5. பிராண வித்தை
6. பிரதர்சன வித்தை
7. பிராணாக்னி ஹோத்ரவித்தை
8. உத்கீத வித்தை
9. நசிகேதாக்னி வித்தை
10. உபகோசல வித்தை
11. சத்ய காம வித்தை
12. வைஸ்வானர வித்தை
13. பஞ்சாக்னி வித்தை(இது சிவஞானபோத மாபாடியத்துள்ளும் விளக்கப் பெறுகிறது.)
14. சம்வர்க்க வித்தை
15. ஆகாச வித்தை
16. கார்க்கி அட்சர வித்தை
17. பிருகுவாருணி வித்தை
18. ஆனந்தமய வித்தை
19. அங்குஷ்ட மாத்ர வித்தை
20. சாண்டில்ய வித்தை
21. **தகர வித்தை**
22. பாலாகி வித்தை
23. உஷஸ்த கஹாலவித்தை
24. உத்தாலக-ஆருணி வித்தை
25. மைத்ரேயி வித்தை
26. பரமபுருஷ வித்தை
27. அட்சர பரா வித்தை
28. சத்வித்யா வித்தை
29. பூமவித்தை

30. பர்யங்க வித்தை
31. ஜோதிஷாம் ஜோதி வித்தை
32. ஈசுவர வித்தை

இவற்றுள் தகரவித்தையை மேலாக எடுத்துப் பேசும் நீலகண்ட மகாபாடியம் சிதாகாசமாகிய ஞான வெளியை முன்னிறுத்தி, அதன் நுட்பமாகிய தகராகாசம் தம் ஆன்மமத்தியில் இருக்கிறது என்று காட்டி, சிதம்பர மகாமந்த்ர விளக்கங்களின் அடிப்படையில் பெறுகின்ற பரஞானப் பேற்றினை விளக்கமுறக் கூட்டியமைக்கின்றது.

தகர வித்தையை அறுமுகப் பெருமானைக் குகன் எனக் கொண்டு அமைத்து முடிப்பதும் ஒரு வகை.

சிதம்பரம் இராமலிங்க வள்ளலார் உப்பினாற் கட்டுவதைத் தகர வித்தை என்றும் ஓஷதிகளாற் கட்டுவதை வகர வித்தையென்றும் எடுத்துக் காட்டி, அவையெல்லாம் சன்மார்க்க நெறிக்கு ஆகாதன என்றும் சுட்டுவார்.

இங்கே சுட்டிக் காட்டப்பெறும் எந்த ஒன்றிலும் மாதவச் சிவஞான சுவாமிகள் கூறும் முதல்வித்தை அமையவில்லை என்பதையும் தெளிவுற உணர்தல் வேண்டும்.

## பஞ்சாக்கர வித்தை

இனி, பஞ்சாக்கர அடிப்படையில் அமையக் கூடிய வித்தை உண்டு. 'பஞ்சாக்கரம்' என்ற அடிப்படையில் மாதவச் சிவஞான சுவாமிகள் தமக்கே உரிய தனிநிலை அனுபவ விளக்கத்தை எடுத்துக் காட்டி விளக்கம் அமைப்பதையும் நாம் காணலாம்.

''ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே''

என்ற சிவஞானபோத ஒன்பதாம் சூத்திரத்தின் மூன்றாம் அதிகரணம் ''இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது'' என அமையும்.

இங்கே சிவஞான சுவாமிகள், நமச்சிவாய மூர்த்திகளை ஆதீன பரமாசாரியராகக் கொண்ட திருவாவடுதுறைத் திருமடத்துக்கே உரிமையுடையதாய்த் திருவைந்தெழுத்து தெளிய உபதேசிக்கப் பெறுவது என்னும் கருத்தும்,

"எவ்வெவகோட் படுபொருளும் அஞ்செழுத்தின்
அடக்கி அவற்று இயல்பு காட்டி
மெய் வகை அஞ்சவத்தையினும் நிற்கு முறை
ஓதுமுறை விளங்கத் தோற்றி
அவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன் தாள் சென்னி சேர்ப்பாம்"

எனத் தம் உபதேச குருவின் மேல் பாடிய பாடற் கருத்தும் இணைய நிறுத்திய சுவாமிகள் தம் உள்ளக்கிடக்கையைத் தெளிவுற அறியலாம்.

இவ்விடத்தில், அஞ்செழுத்து என்பது 'சிவாய' என்ற முத்தி பஞ்சாக்கரமே என்றும், விதிப்படி உச்சரிக்கும் முறைபற்றிச் சுவாமிகள் அருளும் கருத்தும், அவர்தம் நடையிலேயே படிக்கப் படிக்கச் சுவை ஊறி இன்பம் பயப்பதாம். ஈண்டு விரிப்பிற் பெருகும்.

## முனிவரின் வரையறைகள்

இனி, சிவஞான சுவாமிகள் சிவஞான போதத்துக்குப் பேருரை எழுத முற்படும் போது, பன்னிரண்டு நூற்பாக்களை மட்டுமே கொள்ளாது அதிகரணப் பொழிப்பு, ஏது, எடுத்துக்காட்டுக்கள் ஆகிய அனைத்தையும் மெய்கண்டார் அருளிய அருளிப்பாடுகள் எனவே கொண்டு அவை தம்மையெல்லாம் முன்பின் முரணாவாறு அமைத்துக் கொள்ளும் பெற்றியை நாம் உடன்கொள்ள வேண்டும்.

ஏனைய உரையாசிரியர்களைப் போல நூற்பாவை மட்டுமே மெய்கண்டார் வாக்கு என்றும், ஏது முதலியவைகளும் எடுத்துக் காட்டு வெண்பாக்களும் பாடங்கேட்டவர்கள் பாடம் கேட்கும் காலத்தே எழுதி வைத்தவை எனத் தள்ளி விட்டு உரை கொள்ளும் போக்கைப் பின்பற்றவில்லை..

மேலும், உடனிருந்து நேர்முக மாணாக்கராயிருந்து பாடங் கேட்ட அருணந்தி சிவாசாரியாரின் திருவாக்குக்களைப் பல்லாற்றால் ஆய்ந்து நோக்கி அமைத்துக் கொள்வதும், நேர்முக மாணாக்கராயில்லையாயினும் மாணாக்கரின் மாணாக்கர் என்ற வகையில் சார்பு நூல் செய்த உமாபதி சிவாசாரியாரையும், அவ்வாறே நேர்முக மாணாக்கர்களாயமைந்து நூல் செய்த திருவதிகை மனவாசகம் கடந்தார், சிற்றம்பல நாடிகள் ஆகியோர்

தரும் விளக்கங்களையும் ஆங்காங்கே இணைத்துக் காட்டியே உரை எழுதும் போக்கை மேற் கொண்டவர். எல்லாவற்றுக்கும் மேலாக, திருமுறைகள் என நின்ற அருளாளர் தம் திருவாக்குக்களுக்கு இணைப்புக் காட்டியே உரை எழுதும் பெற்றியை மேற் கொண்டவர் என்பதும் தமக்கெனவோர் உரை அமைப்புக் கொள் கையை உருவாக்கி அமைத்துக் கொண்டவர் அவர் என்பதும் அவரை அளந்தறியும் நோக்கில் அமைத்துக் கொண்ட விளக்கங் களாக அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

இனி, சிவஞான முனிவர் ஒரு மாபாடியகாரர் என்பதை நிலை நாட்டும் வகையில் அவர் எழுதிய உரைப்பகுதி ஒன்றைச் சான்றாக எடுத்துக் காட்டி விளக்குதல் அறிஞர் மரபு. அதனையும் நாம் ஆய்ந்து கண்டு முன்னிறுத்திக் கொள்ளுதல் வேண்டும். அப்பகுதி கீழே தரப்பெறுகின்றது.

## கலப்பு என்னும் சொல் விளக்கம்

சிவஞானபோத இரண்டாம் நூற்பாவின் முதல் அதிகரணத் தின் கீழ் இப்பேருரை அமைகிறது.

"முதல்வன் ஐந்தொழில் செய்தல் தன் பொருட்டோ? பிறர் பொருட்டோ? வீணோ? தன் பொருட்டெனின், வரம்பிலின்ப முடைய முதல்வனுக்கு இச்செய்கையால் வரக்கடவதோர் பயன் இல்லை. உயிர்களின் பொருட்டெனின், உயிர்களும் அவனும் அபேதமோ, பேதமோ, பேதாபேதமோ? பொன்னும் பணியும் போல் அபேதமாவின் அது தன் பொருட்டேயாம். இருளும் வெளி யும் போற் பேதமாயின், அவ்வுயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு ஒருவாற்றான் இயைபில்லை. சொல்லுப் பொருளும் போற் பேதாபேதம் எனின், அபேதமும் (ஆம்) பேதமும் ஆம் என்றல் சமணர் கூறும் அநேகாந்த வாதம் ஆகும். சொல்லும் பொருளும் வேறேயாயினும் சொல் வந்து எழலும் பொருள் தோன்றுதல் பற்றி அபேதம் என்பார் மதத்தை ஒருவாற்றான் உடம்பட்டுப் பேதாபேதம் என்னும் துணையன்றி, ஒரு பொருட்கு இரண்டு தன்மை கோடல் பொருந்தாமையின் அது போலியேயாம். இங்ஙனமாகலின், பிறர் பொருட்டென்பது பொருந்தாது, இனி அவ்வாறன்றி வீண் எனின், பித்தர் செய்யும் தொழிலோடு ஒக்கும். பித்தரேயன்றி, அறிவால் முதிர்ந்த அரையர் (அரசர்) முதலியோரும் வேட்டையாடுதல், சூதாடுதல், உயிர்த்தல், இமைத்தல், ஆவித்தல், தும்முதல் முதலிய வீண் தொழில் செய்யக்

காண்டலின், முதல்வனும் அவ்வாறு கொன்னே செய்தல் அமையு மெனின், வேட்டையாடுதல் புலி முதலிய விலங்குகள் மிக்கு நாடு நலியாமைப் பொருட்டாதல், தமக்கு மடிமை வாராமை முதலிய வற்றின் பொருட்டாதல், உணவின் பொருட்டாதல் யாதானு மொரு பயன் குறித்தன்றிச் செய்யாமையானும்; சூதாடுதல் வஞ்சனையாற் பகைவரை வெல்லுதற்கு உபாயம் அறிதற் பொருட்டாதல், பணையம் பேசிப் பொருளீட்டற் பொருட்டாதல் யாதானு மொரு பயன் கருதியின்றிச் செய்யாமையானும்; உயிர்த்தல் உயிர்நிலையின் பொருட்டாகலானும், இமைத்தல் விழியைப் பாதுகாத்தற் பொருட்டாதலானும், ஆவித்தல் தும் முதல் முதலாயின தங்குறிப்பினன்றிக் காரணத்தால் நிகழ்தலானும் இளஞ்சிறார் செய்யும் சிறுதேருருட்டல், சிற்றிலிழைத்தல், முதலிய விளையாடற் றொழிலும், போர்முகத்தில் தேர் நடாத்துதல், அட்டில் தொழில் வன்மை முதலியன சோபான முறையாற் பயிலு தற்பொருட்டு இருமுது குரவர் முதலியோராற் செலுத்தப்பட்டு நிகழ்தலின், அவை பெரும் பயனுடையவாய், அவ்விளமைப் பருவ மாத்திரையின் மகிழ்ச்சி மீதூர்தலாகிய அற்பப்பயனும், உடைய வாகலானும், அவையெல்லாம் வீண் தொழிலன்மையின், வீண் தொழிலெல்லாம் பித்தர் முதலியோர் செய்யும் தொழிலேயாம். இங்ஙனமாகலின், ஐந்தொழில் செய்வோன் முதல்வன் என்றல் இலக்கண வழுவாம் என்று ஆசங்கை நிகழ்ந்த வழி, அதனை நீக்கி வேறாயினும், கலப்பினால் அவையேயாம் இயைபு உடைமையின்; உயிர்களின் பொருட்டே முதல்வன் ஐந்தொழில் செய்வன்'' என்று எழுதிக் காட்டுகின்றார். இங்கே,

''அவையே தானே ஆயிரு வினையிற்
போக்கு வரவு புரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்கும் அன்றே''

என்ற இரண்டாம் நூற்பாவில் ஒன்றாதல், வேறாதல் என்ற இரு நிலை மட்டுமே பேசப் பெறுகின்றமை வெளிப்படையாதலின், மூன்றாவதாகிய ஒரு நில்லயை உடன் கொள்ள இயலாது. அவ் வகையில், நூற்பாவை இரட்டுற மொழிதல் என்னும் உத்தியின் துணைக் கொண்டு, அவையே ஆய், தானே ஆய், அவையே தானே ஆய் என மூன்றாவதாகிய ஒரு நிலையை அமைத்துக் கொண்டு' அதனை ஒன்று, வேறு என்ற வாய்பாட்டாற் காட்டாது 'கலப்பு' என்ற ஒருவகைப் புதிய வாய்பாட்டை அமைத்துக் கொள்ளுகின் றார். அவ்வாறு, மூன்றாவதாகிய ஒரு நிலையைக் கொள்ள

வேண்டிய இன்றியமையாமையை மாபாடிய காரர் என்ற வகையில் சிவஞான முனிவர் விளக்கிச் செல்லுகின்றார்.

## உடனாதல் - விளக்கம்

இனி, இம்மூன்று நிலைகளையும் விளக்கமாக அமைத்துக் கொள்ளும் வகையில், பொருண்மையால் பேதம் என்பதும், கலப்பினால் அபேதம் என்பதும் உணர்த்தப் பெற்றபின், உயிர்க்குயிராதல் தன்மை எனப்பெறும் உடனாதல் தன்மை உணர்த்தப் பெற்றது.

அடுத்து, பேதம் அபேதம் எனநின்ற இரு நிலைகளைக் காட்டிலும், 'உடனாதல்' என்ற நிலை அத்துவிதம் என்ற சொற்கு நேர்ப்பொருளாக நின்று மூன்று நிலைகளையும் விளக்கி அமைந்தது.

இனி, உடனாதல் என்ற நிலையில் இருவேறுபொருள் ஒன்றென நிற்றல் என்பது மட்டுமன்று; செயற்படுத்திச் செயல்படல் என்ற தொழின்மை நிலையும் அமைகிறது.

இவைகளையெல்லாம் அடிப்படை விளக்கங்களாக அமைத்துக்கொண்டு உரையெழுதிச் செல்லுதல் சிவஞானமுனிவர் திறமை மட்டுமே என்று கொள்ள முடியாதவாறு, நூற்பாவாலும் ஏதுவாலும், எடுத்துக் காட்டாலும் அந்த நிலை உருவாகி விடுகிறது என்றே கொள்ளுதல் வேண்டும்.

## ஐந்தவத்தையும் அறிவும்

அடுத்து, நான்காம் நூற்பாவில், ஆன்மாவுக்கு ஐந்தவத்தைகள் உண்டு எனக் கூறி, எல்லாத் தத்துவங்களோடும் கூடியிருக்கும் சாக்கிரம் முதலாக, மெல்ல மெல்லத் தத்துவங்களை நீக்கித் தனித்துத் தனித்து வந்து துரியாதீதத்தில் ஆன்மா தனித்தே மூலாதாரத்தில் நிற்கும் நிலை உருவாக்கப் பெற்று விடுகிறது.

அடுத்து வரும் ஐந்தாம் நூற்பா

''விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு
அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமி அருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே''

என அமைகிறது. இங்கே, ஆன்மாவின் அறியும்முறை விளக்கம் பெறத் தொடங்குகின்றது.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன ஆன்மா அதிட்டித்து நின்றபோது தான் அறியும். அப்படி அறியும் தன்மையை ஆன்மா வின் அதிட்டித்தல் நிலையாற் பெற்ற அவைகளும், தம்மையோ தம்மை அதிட்டித்து நிற்கும் ஆன்மாவையோ அறியா.

அத்தகைய விளக்கத்தின் அடிப்படையிலேயே, அறிவுடைப் பொருளெனக் கருதப்பெற்ற ஆன்மாவும், தம்மையும் தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும் திருவருளையும் அறியாது. இங்கே

**தாம் தம் உணர்வின் தமியருள்**

என்ற மூன்றாம் வரியானது பெரிதும் விளக்கமமைத்துக் காணும் மூலமுதல் மொழியாக அமைகின்றது.

## முதலால் உணரும் முறை

தாம் என்பது ஆன்மாக்களைக் குறித்தது. பின்னின்ற தமி அருள் என்பன தமியாகிய முதல்வனது அருள் என்ற பொருளை அமைத்தன. "**தம் உணர்வின் தமி**" என்பதன் விளக்கம், "ஆன் மாக்களின் உணர்வின் முதல்" என அமைகிறது. அதனைத் "தமது முதல்" எனக் கொள்ளுக என அமைத்துக் காட்டுகின்றார் சிவஞானமுனிவர்.

தமது முதல் என்றாலும் தம் உணர்வின் முதல் என்பதே பொருளாக அமைகிறது.

'தம் உணர்வின் தமி அருள்' என்பதைத் தனியே ஓர் அதி கரணமாக்கி விளக்கும் நிலையிலும் நாம் அறிய நிற்கும் பொருள் விளக்கம் ஒன்றே.

'தமி' என்பதால் ஆன்மாவை உற்றுநிற்கும் முதல்வனுக்கு வேறு அதிட்டித்தல் தேவையில்லை. அவ்வகையில் அது முதல்; தமி; வேறொன்றன் சார்பு வேண்டாதது. ஆன்மாவின் நிலை என்னெனில்,

"ஆன்மாவானது தமது முதலாலே உணரும்". மெய் வாய் கண் மூக்கு என்பவைகள் தம் முதலாலே உணர்தல் போல என அமைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

ஐந்தாம் நூற்பாவின் முடிந்த முடிபாக நாம் ஒரு கருத்தைக் கொள்வதாக இருந்தால், **முதலால் உணரும் முறை** என்பது சோபான முறையால் உணர்த்தப் பெறுகிறது என்பதே.

உடனாதல் நிலையால் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவைகளின் உணர்வுகளுக்கு முதல் என ஆன்மா நின்றாற்போல, உடனாதல் நிலையால், ஆன்மாக்களின் உணர்வுகளுக்கு முதல் என இறைவன் அல்லது இறைவனருள் நிற்கிறது என்பதே.

உடனாதல் நிலையில், செயற்படுத்துகின்ற முதலின் நிலையும் செயல்படுகின்ற பொருள்களின் நிலையும் என்ன எனில், செயற்படுகின்றவைகளுக்குத் தம்மையோ, தம் முதலையோ அறியும் நிலை இல்லை. செயல்படுத்துவதற்கே அது தெரியும். மெய் வாய் கண் மூக்குச் செவியைச் செயற்படுத்தும் நிலையில் அவைகளுக்கு முதல் எனத் தம்மை உணரும் ஆன்மா, தன்னுடைய உணர்வுக்கு ஒரு முதல் உண்டு என்பதையும், அதனால் அறிகிறோம் என்பதையும் அறிதல் இல்லை.

இம்முறையை **முதலால் உணரும் முறை** எனப் பொதுவில் அமைக்கலாம். இங்கே, சிவஞானமுனிவர், தாதான்மிய சத்தியது இயல்பு இன்னதென விளக்கம் பெறும் எனக் கூறி,

''அருளுண்டாம் ஈசற்கு அது சத்தியன்றே
அருளும் அவனன்றியில்லை—அருளின்று
அவனன்றே யில்லை அருட்கண்ணார் கண்ணுக்கு
இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து''

என்ற எடுத்துக்காட்டு வெண்பாவின் இலக்கணம் கூறி, இவ்வியல்பு **சித்தாந்த நெறி உணர்ந்தார்க்கன்றி விளங்காது என்பார்,** அருட் கண்ணார் கண்ணுக்கு இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து என்றார்.

இத்தகைய விளக்கத்தால் நாம் தெளிந்து கொள்ள வேண்டிய புதிய விளக்கம் யாது?

மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவைகளை ஆன்மா அதிட்டித்தாலே அறிந்து விடா. சூரிய வெளிச்சமும் நின்று, கண்ணுடனும், பார்க்கப் பெறும் பொருளுடனும் இணைந்து நின்று விளக்கினால் தான் அவைகள் தெரிந்து கொள்ளும் என்ற விளக்கம் கிடைக்கிறது.

இனி, முடிந்த நிலையில், பயிற்சி பயத்தால், மெய், வாய், கண், மூக்கு, செவி முதலியவைகளுக்கு நாம் முதல் இல்லை. அவைகளும் அவனால்தான் உணரும் நிலை பெறுகின்றன என்ற நிலை வரும்.

## பொதுவியல்பும் சிறப்பியல்பும்

அந்நிலையில், தன்னைச் சார்ந்த பல்வேறு வகைப்பட்ட நிறங்களையே தன்மாட்டுக் காட்டும் இயல்புடைய படிகம் போல, ஆன்மாவானது தன்னைச் சார்ந்த இந்திரியங்களினியல்பையே தன்மாட்டு விளக்குவதாகிய தனது சார்ந்ததன் வண்ணமாந் தன்மையை முன்னர்ச் சிந்தித்து, உணர்ந்து கொண்டு, பின்னர்ப் பலவேறு வகைப்பட்ட இயல்புடைய பொது இயல்பைச் செய்யும் இந்திரியங்களைத் .தனக்கு வேறாகக் கண்டு, அவற்றான் ஆகிய பொதுவியல்பு பொதுவியல்பேயாய் ஒழியுமாறு, தனது சிறப் பியல்பை உணர்ந்தான் ஆயின், அவன் பரம்பொருளாகிய சிவத் துக்கு அடிமையாய் அப்பரம்பொருளின் இயல்பு தன்மாட்டு விளங்கச் செய்வன். அப்போது முன் விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேறாய் ஒழியும்.

அந்நிலையில் அவன் தம்முடைய மெய், வாய் முதலியவை களுக்குத் தான் முதல் என நின்றதை மாற்றி, அவைகளுக்கும் முதலாவான் அவனே என்றும், தான் தன் உணர்வின் தமி என நின்ற முதல்வனுக்கு அடிமை என நின்றாற் போல, 'அவைகளும் நேரே முதல்வனுக்கு அடிமை என நினைத்து, அவற்றின் வேறாய்த் தன்னை நிறுத்திக் காண முற்படுவன்.

அந்நிலையில் 'தன் தரும தருமி' எனநின்று, தமது முதல் வனின் இச்சா ஞானக் கிரியைகளுள் தம் இச்சாஞானக் கிரியை களை ஒடுக்கி நிற்பன். அதனை,

''பன்னிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம்
தன்னிறமே காட்டும் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டான்
மெய்ப் பெருட்குத் தைவமாம் வேறு''

என்ற வெண்பாவிற் கூறுமாறு மெய் காணும் நிலை பெறுவன்.

இதனை ஏகன் ஆகி இறைபணி நிற்றல் என்றும் விதிமுறைப் படுத்தியும் கொள்ளலாம். அந்நிலையில் அவனுக்கு ஒரு புதிய அனுபவம் பிறக்கும்.

பெத்தத்தினும் முத்தியினும் ஒருதன்மைத்தாய், கண்டும் காட் டியும் உடனாய் நின்று உபசரித்து வரும் அயர்ச்சியின்மையாகிய அன்பு எனப் பெறும் அருளின் சுத்த அத்துவித நிலை அருளால்

அனுபவம் பெறும். அப்பொழுதே இதுவரை திரோதானமாக நின்ற சத்தி அருளாய் நின்று இன்ப அன்பாய் விளங்கும்.

அந்நிலையில், எந்த ஒரு மறைப்பாலும் மடங்காது முதல் வனின் தற்றரும தருமியாய் அவன் வியாபகத்துள் வியாப்பியமாய் நின்று, அவன் இச்சாஞானக் கிரியைகளின் கீழ்நின்று, முதலால் உணரும் போதநிலையில், போதானந்தப் பொருளாய் நின்று உணர்ந்த முடிவுகளே சித்தாந்தம் எனவும் மெய்கண்ட நூல்கள் எனவும் அமைந்தன. அவைகளே சிவஞான போதம் ஆயின.

பெத்தம் முத்தி எனப் பெறும் இரண்டு நிலைகளிலும் ஒரு தன்மைத்தாய் அமைந்த சுத்தாத்துவித அனுபவ நிலையில் நின்று, தம்முடைய முதலால் உணரும் போதானந்தப் பொருளனு பவ ஞானமே முதல் வித்தை—முதலால் உணரும் வித்தை என்ற பொருளில் அமைகிறது.

## முடிப்புரை

சிவதத்துவ விவேகத்துள், சிவஞான சுவாமிகளாற் குறித்துக் கூறப் பெற்ற '**முதல் வித்தை**' என்பது ஆன்மாவானது தமது முதலால் உணரும் வித்தை எனப் பொருள்பட்டு, அதுவே, இறவாத இன்ப அன்பு நிலையை உள்ளிட்ட போதானந்தப் பொருளனுபவமாகும் என்று கொள்ளுதல், அதன் அடுத்த செய்யுளில் அவராற் கொள்ளப் பெறும் 'நட்பியலுரை' என்பத னோடும் பொருத்தமுற அமையும்.

# 6. சுத்தாத்வைதம்

## முன்னுரை

'பொருள்' பற்றிய கொள்கையை வரையறை செய்தமைத்தல் என்பதே மெய்யுணர்வுத் துறையின் பணி. பொருள்பற்றிய செய்திகளை ஆய்ந்தும், தன்மைகளைத் துய்த்தும் வரையறை செய்வது அறிவு.

பொருள்பற்றிய வரையறையை உணர்த்தும் முறை இரண்டு. கொள்கையின் அடிப்படையில் உணர்த்துவது ஒரு முறை; அடைந்து அனுபவித்தல் என்பதன் அடிப்படையில் உணர்த்துவது இரண்டாவது முறை. முன்னதைத் தத்துவம் என்றும், பின்னதைச் சமயம் என்றும் குறிப்பிடும் வழக்கு உண்டு.

சைவம் என்பது சமயஞ் சார்ந்த பெயர் எனவும், சித்தாந்தம் என்பதை அறிவாராய்ச்சியியற் கொள்கையின் அடிப்படையில் அதற்கு வழங்கும் பெயர் எனவும் கொள்வது பெயர்கள் வெற்று இடு குறிகளல்ல, அவையும் பொருட் பொதிவுடன் இணைக்கப் பெற்றவைகளே என்ற அடிப்படையில் உணர்ந்துகொள்வதாகும்.

வேதாந்தம் எனப்பெறும் உபநிடத வழியினும், **பிரமசூத்திரம்** என்ற நூலுக்கு எழுந்த உரைகளின் வழியிலும் எழுந்த மெய்ப் பொருட் கொள்கைகளை 'அத்துவிதம்' என்ற சொல்லோடு இணைத்துக் காட்டும் வழக்கு மலர்ந்தது.

கேவலாத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதாத்வைதம், சிவாத்வைதம் என்ற பெயர்கள் மெய்ப்பொருட் கொள்கைகளைக்

குறிக்க எழுந்த வழக்காறுகளே. அவ்வகையில் சித்தாந்த சைவத்தை 'அத்வைதம்' என்பதனோடு இணைத்த எப்பெயரால் வழங்குவது என்பது ஒரு வினா. அப்படிக்குறித்து வழங்க வேண்டிய நிலை வைதிக வழிவந்த மெய்ப்பொருட் கொள்கைகளுக்கே அமையும். சிவாகம வழி வந்த சித்தாந்த சைவத்தை அத்தகைய பெயரமைப்பில் விளக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதைப் பொதுவிடையாக எடுத்து வழங்கி விடுவது உண்டு. அவ்வகையில் எழும் ஆய்வை அடிப்படையாகக் கொண்டு அமைந்ததே இப்பகுதி.

## சிவஞான சித்தியார்

சிவஞானபோதத்துக்கு வழிநூல் என்ற முறையில் அமைந்த **சிவஞானசித்தியார்**, சுபக்கம், பதினொன்றாம் சூத்திரப் பொருள் அமைப்பில் **சுத்தாத்துவிதம்** என்ற தலைப்பில் ஆறு திருவிருத்தங்கள் காணப்பெறுசின்றன.

## சிவப்பிரகாசம்

உமாபதி சிவாசாரியார் அருளிய **சிவப்பிரகாசம்** சார்பு நூல் எனக் கொள்ளும் மரபு வழக்கு உண்டு. **சிவப்பிரகாசம்** என்னும் நூல் **நுதலிய பொருள்** என்பதாக அமைந்த விருத்தம் சித்தாந்தக் கொள்கையின் பெருமையை வரையறை செய்துணர்த்தும் ஒரு கண்ணாடி என அனைவராலும் எடுத்துக் காட்டப் பெறும் பெருமையுடையது.

''புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்
புகல் அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள் வெளிபோற் பேதமும் சொற்பொருள் போல்
பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர் கண் அருக்கன்
அறிவொளி போல் **பிறிவரும் அத்துவிதமாகும்**
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்''

இச்செய்யுளில் அமைந்த '**பிறிவரும் அத்துவிதம்**' என்ற தொடரில் பிரிவு என இடையினமே இருக்க வேண்டும். ஆனால், எல்லா இடங்களிலும் - செய்யுளிலேயன்றி உரைநடையிலும் - எழுதுகிற சான்றோர்களெல்லாம் வல்லினம் அமைத்தே 'பிறிவரும் அத்துவிதம்' என எழுதுவதே வழக்காக அமைந்துள்ளது.

## உண்மை விளக்கம்

திருவதிகை மனவாசகம் கடந்தார் மெய்கண்டாரின் நேர் மாணாக்கர். அவர் அருளிய **உண்மை விளக்கம்** என்ற நூலில் **அத்துவிதமுத்தி** என்ற தலைப்பில் ஆறு வெண்பாக்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

## பொது

மெய்கண்ட சாத்திர நூல்களில் முத்திநிலை பற்றிப் பேசும் இடங்களில் ஆன்மாவும் இறைவனும் நிற்கும் நிலைபற்றிய விளக்கம் அமையும் போதெல்லாம் இத்தகைய குறிப்பின் அடிப் படையிலேயே விளக்கம் அமைக்கப் பெறுவது பொதுவாகக் காணப் பெறும் குறிப்பு.

'அத்துவிதம்' என்ற சொல் எழுப்பிய மயக்கத்தில் தெளியாது தத்துவவாதிகள் மயங்கிக் கிடந்த காலத்து, அம்மயக்கத்தைத் தெளிவாக்க எழுந்ததே சிவஞானபோதம் என்ற வழக்காறு உண்மையின், 'அத்துவிதம்' என்ற சொல்லின் அடிப்படையில் எழும் பொருள் முறைகளை வரையறை செய்தமைத்த பெருமை சிவஞானபோதத்துக்கு உண்டு எனத் தெளிதலின், சித்தாந்த சைவம், அத்வைதம் என்ற சொல்லின் அடிப்படையிலும் விளக்கம் செய்து அமைத்துக் காட்ட வேண்டிய இன்றியமையாமைப் பணியில் உள்ளது என்பது உணரத் தகுவதொன்றாம்.

சிவஞானபோதச் செம்பொருள் நெறியை அத்துவிதம் என்ற சொல்லின் அடிப்படையில் வைத்துப் பொருள் விளக்குதல் தேவை யான பணியே என்பதை மாதவச் சிவஞான சுவாமிகள் கருதி, அப்பணிக்கு ஏற்றவகையில் இயைபு கிடைத்த இடங்களிலெல்லாம் ஏற்ற பெற்றி எழுதி விளக்கியுள்ளாராதலின், அவர்தம் உரையின் வழிநின்று விளக்கமுறுத்துதல், அவர் நோக்கில் சைவசித்தாந்தம் என்ற இத்தலைப்புக்கும் ஏற்ற ஒன்றே.

## குறையே

இந்நாளில் சித்தாந்த சைவம் பற்றி எழுத முற்படுகின்ற சான்றோர்கள் 'அத்வைதம்' என்ற சொல்லமைப்பில் எடுத்து விளக்கும் முறையைப் பெரிதும் புறக்கணித்தல் ஒரு வகைக் குறையே. அக்குறையை மனத்துட் கொண்டே ஒரு தனித் தலைப் பும் அதை ஒட்டிய ஆய்வும் இங்கே இடம் பெறலாயின.

## அத்வைதம் என்ற சொல்லின் தோற்றம்

சாந்தோக்ய உபநிடதத்தில், ஆறாம் அத்தியாயத்தில் ஒரு கதை வருகிறது. உத்தாலகன் என்பான் தன்மகன் சுவேத கேதுவை வேதம் படிக்க அனுப்பினான். பன்னிரண்டு வயதில் சென்ற சுவேதகேது இருபத்து நான்காவது வயதில் வேதங்களை உணர்ந்து திரும்பினான். உத்தாலகன் தன் மகனைப் பார்த்து ''எந்த ஒரு கல்வியால் கேட்கப்படாதது கேட்கப் பட்டதாக ஆகுமோ, நினைக்காதது நினைக்கப்பட்டதாக அமையுமோ, அறியாதது அறியப்பட்டதாக அமையுமோ அதனை உன் ஆசிரியர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டாயோ?'' என்று கேட்டான். சுவேதகேது தனக்கு அவ்வாறு ஒன்றும் தெரியவில்லை என்கிறான்.

''குழந்தாய், எந்த ஒரு மண் கட்டியினால் மண்ணாலாகிய அனைத்தும் அறியப்பட்டதாகுமோ, வேறு வடிவு வேற்றுமை முதலியனவெல்லாம் அழிந்துபோக, மண் ஒன்றே உண்மையோ, அங்ஙனம்,'' என விளக்கினான் தந்தை.

இவ்வாறு தனக்கு உபதேசிக்கவில்லை என்றும், தாங்களே இதை உபதேசிக்க வேண்டும் என்றும் சுவேதகேது தன் தந்தை யாகிய உத்தாலகனையே கேட்டுக்கொள்கிறான்.

உத்தாலகன் சுவேதகேதுவை நோக்கி, குழந்தாய் படைப்புக்கு முன் இவ்வுலகு **ஒன்றேயாக, சத்தாக, அத்விதீயமாக இருந்தது** என்று பாடத்தைத் தொடங்குகிறான். இங்கு வரும் வாக்கியமே **''ஏகம் ஏவ அத்விதீயம்''** என்பது. படைப்புக்குமுன் சத்து என்பது ஒன்றாக அத்விதீயமாக இருந்தது என்பதே அதன் விளக்கம்.

சத்தானது ஒன்றாக இருதிறன் இல்லதாக இருந்தது என்பதே நேர்ப்பொருள். ஆனால், இதன்னை ஒன்றே இரண்டற்றதாக இருந்தது என மொழிபெயர்க்கின்றார்கள்.

சத் என நின்றது ஒன்று; அது இரண்டற்றது என விளக்கம் அமைக்கும்போது, ஒன்று என்று சொன்ன பிறகு இரண்டற்றது என்று சொல்லுவானேன் என்பதே முதலில் தோன்றும் வினா. இதனை, சங்கரர், இராமானுசர், மத்வர் மற்றும் பலர் தத்தம் கொள்கை அடிப்படையில் விள்க்கம் செய்ய முற்பட்டார்கள்.

எல்லா உரையாசிரியர்களும் ஏகம் என நின்றது எதுவோ அதுவே அத்வைதம் என்ற சொல்லாலும் விளக்கப் பெறுவதாகக்

கொண்டு, ஒன்று என நின்றது எதுவோ, அதுவே அத்வைதம் என்ற சொல்லாலும் விளக்கப் பெறுகிறது எனக் கொண்டார்கள்.

மெய்கண்டார் மட்டும் 'அத்வைதம்' என்ற சொல்லுக்கு, அது ஒருவகை உறவு முறையைக் குறிக்கவந்த சொல் என்று உரை விளக்கம் அமைக்கின்றார்.

அத்விதீயம் என்பது அந்நியமில்லை என்ற உறவைக் குறிக்க வந்தது என்பதே மெய்கண்டார் வாக்கு. இதனை "ஏகம் என்னில், ஏகம் என்று சுட்டுவது உண்மையின், அத்துவிதம் என்ற சொல்லே அந்நியநாத்தியை உணர்த்தும் ஆகலான் (ஆயிட்டு)" என வார்த்திகம் அமைத்துக் காட்டியுள்ளார். அந்த உறவே 'உடனாதல்' என்பது. அந்நியநாத்தி - அந்நியமின்மை; அநந்நியம், வேறாக இல்லாமை; பிரிப்பின்றி நிற்றல். இவ்விளக்கத்தையே **"பிறிவரும் அத்துவிதம்'** என்றார் உமாபதி சிவாசாரியார்.

இதன் விரிவுகளை மாபாடியத்துள் சிவஞான முனிவர் எழுத்தால் அறியலாம்.

சத்து என நின்ற, முடிநிலைப் பொருள் எனநின்ற முழுமைப் பொருள் பற்றிய விளக்கங்களின் அடிப்படையிலேயே அப்பொருள் பற்றிய கொள்கைகளுக்குப் பெயர் அமைவனவாயின.

எடுத்துக் காட்டாகச் சங்கரரின் கொள்கையை எடுத்துக் கொள்ளலாம்.

அத்துவிதம் என்னும் சொல்லுக்கு 'இரண்டு இல்லை' எனப் பொருள் கொண்டு, இரண்டு இல்லை என்பது மூன்று, நான்கு முதலிய எண்களுக்குப் பொருந்தாது, அது ஒன்று என்னும் எண்ணுக்கே பொருந்தும் எனக் கொண்டு, இரண்டு இல்லை என்பதால் பொருள் ஒன்றேயாம் என முடித்து, பின்னர், ஏகம் எனவும் அத்துவிதம் எனவும் இரண்டு சொற்களாற் கூறப்பெற்றிருத்தலின், பொருள் ஒன்று என்று மட்டும் கொண்டால் போதாது எனக் கொண்டு அப்பொருளை மிகஉயர் பொருள் என்ற வகையில் 'கேவலம்' எனநிறுத்தி அதனை 'ஏகம் ஏவ அத்விதீயம்' என்ற முச் சொற்களையும் முறையுறக் கொண்டு விளக்குவான் முற்பட்டு,

'ஏகம்' என்பதால் சுவகதபேதம் இல்லாதது என்றும் (மரம் ஒன்றாயினும் அதன் இலை, பூ முதலியன வேறாக இருத்தல் சுவகத பேதம்);

**'ஏவ'** என்பதால் ஒருமரம் அதேபோன்ற மற்றொரு மரத்தின் வேறாக இருப்பது போன்ற சஜாதீய பேதம் இல்லாதது என்றும்;

**அத்துவிதம்** என்பதால் தண்ணீருக்கு மாறாக நெருப்பிருத்தல் போல விஜாதீய பேதமும் இல்லாதது என்றும் கொண்டு, கேவலம் எனநின்ற அப்பொருளுக்கு ஏகம் என்பது உடன்பாட்டு முகமான விசேஷணம் என்றும் அத்துவிதம் என்பது எதிர்மறை இயலான விசேஷணம் என்றும் விளக்கம் கூறுவர்.

முடிந்த முடிபாக, தன்னின் வேறாக ஒரு பொருளும் இன்றித் தானும் குணமுடைப் பொருளென விசேடிக்கப்படுதல் இன்றி நிர்விசேஷமாய் நிற்கும் பரப்பிரமப் பொருள் கேவலம்-என்பது அத்துவிதம் என்னும் சொற்குப்பொருள் எனக் கொள்வதால், அக்கொள்கை **கேவலாத்வைதம்** என்ற பெயரைப் பெற்றது.

அவ்வாறே விசிட்டாத்வைதத்தையும் காணலாம். இது இராமானுசரின் கொள்கை. நீலகண்ட பாடியத்துள் காட்டப் பெறும் சிவாத்வைதமும் அதையொட்டியதே. இவ்விரண்டிலும் சங்கரரைப் போலவே அத்துவிதம் என்ற சொல்லுக்கு இன்மை என்ற பொருளில் இரண்டு இல்லை; ஒன்று எனவே கொள்வர். ஆயினும் சங்கரரைப் போல நிர்க்குணம், நிர்விசேஷம் என்பதாக அப்பொருளைக் கொள்ளுதல் பொருந்தாது. சத்தி சங்கற்பம் முதலிய குணங்கள் பரப்பிரமப்பொருட்கு உண்டு என உபநிடதங் கள் கூறலான், அவைகளோடு முரண்பட்டுக் 'கேவல அத்வைதம்' எனப் பொருள் கொள்ளல் பொருந்தாது.

தன்னோடு இயைபுடைய பசு, பாசங்களானும், தன் குணங் களாகிய சத்தி, சங்கற்பம் முதலியவைகளாலும் விசேடிக்கப்பட்டு, விசிட்டமாய் (அவைகளைத் தன்னுள் அடக்கியதாய்) நின்ற பரப் பிரமம் இரண்டில்லை; ஒன்றே எனக் கொள்வதே அத்துவிதம் என்னும் சொற்குப் பொருள் எனக் கொண்டார். அதனால் இராமானுசரின் கொள்கை விசிட்ட அத்வைதம் எனப் பெற்றது.

அவ்வாறே குணவிசேடமுடைய, ஏனைய பசு பாசங்களைத் தன் அகநிலையிற் கொண்டு, விசேஷ விளக்கம் உடையது என்ற வகையில் நின்ற சிவம் இரண்டில்லை, ஒன்று என்பதே அத்துவிதம் என்னும் சொற்குப் பொருளாகக் கொள்ளலின் அக்கொள்கை சிவாத்வைதம் எனப் பெற்றது.

'அத்துவிதம்' என்ற சொல்லை அ+துவிதம் எனப் பிரித்து, முன்னின்ற 'அ' என்பதற்கு இன்மை, மாறுகோள், அன்மை என மூன்று நிலையிற் பொருள் கொள்வது வடமொழி இலக்கண வழக்கு. அவற்றுள் 'அ' என்பதற்கு 'இல்லை' என்ற பொருளின் அடிப்படையில் இரண்டில்லை, ஒன்று எனக் கொண்டு விளக்கங் கூறியவர்களே சங்கரரும், இராமாநுசரும், நீலகண்டரும்.

மத்வாசாரியார் முரண் என்ற பொருள் கொண்டு துவைதாத் வைதம் அமைத்தார். அவ்வகையில், அ+துவிதம் என்பதற்கு இரண்டன் மறுதலையாகிய ஒன்று எனப் பொருள் கொண்டு அந்த ஒன்றன் மறுதலையாகிய இரண்டாவதும் உண்டு எனக் கொண்டு, அத்துவிதம் என்பதற்குத் துவிதம் என்பதே பொருள் எனக் கொள்வர்.

இன்மை பற்றியும் மறுதலைபற்றியும் பொருள் கொண்டோர் எடுத்துக் கூறும் விளக்கம் இவ்வாறாக, மெய்கண்டார் அன்மைப் பொருள் கொள்ளுகின்றார்.

அன்மைப்பொருள் கொள்ளும் வகையில் சித்தாந்த சைவம் எத்தகையதொரு பெயரை அமைத்துக் கொள்ளுகிறது என்று அமைத்துக் காட்டவேண்டிய பணி உண்டு.

> "ஒன்று என்றது ஒன்றே காண் ஒன்றே பதி பசுவாம்
> ஒன்று என்றநீ பாசத்தோடு உளை காண்—ஒன்று இன்றால்
> அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்
> இக்கிரமத்து என்னும் இருக்கு"

என்ற வெண்பாவின், முதலிரண்டு வரிகள் இம்மறைப் பொருளை நேர்நின்று விளக்குவதாகக் கொள்ளலாம். 'ஏகம்' என நின்ற ஒரு நிலைக்கே முதல் இரண்டு வரிப்பொருளும் அமைந்து விடுகிறது. ஒன்று என்று சொன்னது ஒன்று. ஒன்று என நின்றது பதியே; ஒன்று என்று சொன்ன ஒன்று இருக்கிறதே அது பசு. அது பாசத்தோடு உளதாக இருப்பது என்பதே மெய்கண்டார் தரும் விளக்கம்.

ஒன்று என்று கூறியதோடு அமையாது அத்வைதம் எனவும் கூறியதால், அத்துவிதம் என்பது முதல்வன் உயிர்களினின்றும் வேற்றுமையின்றி நிற்பன் என்ற பொருளில் வருகிறது என்பது ஒன்று என்பதையும் அத்வைதம் என்பதையும் இணைத்த நிலையில்

மெய்கண்டார் அமைக்கும் உரை. அத்துவிதம் என்பதற்கு வேற்றுமையின்றி நிற்றல் என்பதைப் பொருளாகக் கொள்ளும் சித்தாந்த சைவத்துக்கு அத்துவித அடிப்படையில் என்ன பெயர் அமைப்பது?

'பிறிவரும் அத்துவிதமாகும் சைவசித்தாந்தம்' என்பது உமாபதி சிவாசாரியார், சிவப்பிரகாசத்தில் அமைத்துக்காட்டும் பெயர் முறை.

**சிவஞான முனிவர் பணி**

"அவையே தானே ஆயிரு வினையின்" எனத் தொடங்கும் சிவஞான போத இரண்டாம் நூற்பாவின் தொடக்கத்தில் 'இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது' என்ற முதலதிகரண விளக்கம் அமைத்துக் கொண்டு, அம்மேற்கோளைச் சாதித்தற்கு எழுந்த ஏதுவாக, அத்துவிதம் என்ற சொல்லானே ஏகமெண்ணில் ஏகமென்று சுட்டுவதுண்மையில் அத்துவிதமென்ற சொல்லே அந்நியநாத்தியை உணர்த்து மாயிட்டு" என வரும்" எனக் கூறி முடித்திருக்கும் நிலையில் அமைந்த முரண்பாடு முதன்மைச் சிக்கல்.

அடுத்ததாக, எடுத்துக்காட்டுக்களாக அமைந்த வெண்பாக்களை முறைப்படுத்திப் பார்க்கும் வகையில் தெளியப்பெறும் உறவு நிலைகள் மூன்றென அமைதல் என்ற கருத்துடன் அவையேயாய் தானேயாய் என்ற இருமை உறவு நிலைகள் மட்டுமே கொண்டு நிற்கும் நூற்பா நிலை.

மூன்றாவதாக, அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்று சுட்டுவது என்ற வழக்கு எழுந்த இடம் பொருளிலக்கண வரையறை என்ற உபநிடதப் பின்னணியும், சிவஞானபோத இரண்டாம் நூற்பா அமைப்புப் பின்னணியும் இயையாமை.

இவ்வாறமைந்த மூவகை முரண்களில், முதன்மையாக இரட்டுற மொழிதலை உடன்கொண்டு அவையேயாய் தானேயாய், அவையே தானேயாய் என மூவகை உறவுநிலைகளை நிலைநாட்டி,

"அது நீயாகின்றாய் எனவும் அதுவானேன் எனவும் அது இது எனவும் அது நான் எனவும் பொருள்படும் 'தத்துவமசி' முதலிய மகாவாக்கியங்களின் பொருளே ஈண்டு எடுத்தோதினாராகலின்

ஆண்டுக் கிரியையில்லாத சடப்பிரபஞ்சத்தை வருவித்துரைத்தல் பொருந்தாமை அறிக.'' என்று எழுதி இந்நூற்பா மகாவாக்கியப் பொருளை உணர்த்தும் உட்கிடக்கையைக் கொண்டது என அமைத்துக் காட்டினார். இவ்வமைப்புக்கு வழிநூலாசிரியர் கூற்றோ, புடைநூலாசிரியர் கூற்றோ கைகொடுக்கவில்லை என்பதையும் நாம் உணரலாம்.

தத்துவமசி முதலிய மகாவாக்கியப் பொருளே ஈண்டு எடுத்தோதினார் என அமைத்தால் அவனே தானே ஆகிய அந்நெறி என்பதும் அப்பொருள் படவந்ததுதானே என்ற வினா அமையும் ஆதலின், கூறியது கூறல் குற்றம் வரும் என உடன்கொண்டு, இப்பொருளையே பயன் ஒத்தினுள் அநுவதித்துக் கூறி அமைத்தார் என நிறுத்தி, அது கூறியது கூறல் என்னும் குற்றம் நோக்கியதன்று, ஒரு பயன் நோக்கி மீண்டும் எடுத்துக் கூறும் அநுவாத முறை எனவும் அமைத்துக் காட்டினார்.

மகாவாக்கியப் பொருளே ஈண்டு எடுத்தோதினார் என்ற கூற்றை வலிமைப்படுத்தியவுடன், பொருள்கள் நிற்கும் நிலைமையின் அமைந்த உறவு முறையே இவண் விளக்கமுற்படுவது என்பது வெளிப்பட அமைந்த கருத்தாகின்றது.

அடுத்து, 'ஏகம் ஏவ அத்விதீயம்' என்ற வாக்கியம், பொருள் இலக்கணம் கூற எழுந்ததாகவே அமைத்து, அனைத்து ஆசாரியன்மார்களாலும் உரைகொள்ளப் பெறவும், அதற்கு மாறாக, 'அத்துவிதம்' என்பது பொருளிலக்கணம் புலப்படுத்த வந்ததன்று பொருள் பிறவற்றோடு உறவு கொண்டு நின்ற நிலையைக் குறிக்க வந்த சொல்லே, என அமைத்துக் காட்டும் வன்மை சிவஞான சுவாமிகளுக்கே அமைந்த தனித்திறன்.

### அத்வைதம் என்பதன் விளக்கம்

அத்வைதம் பொருள் இலக்கணம் உணர்த்தும் சொல் என்பதே பொதுக்கொள்கை. ஆனால், பொருள் பிறவற்றோடு நின்ற உறவைக் குறிக்கும் சொல்லே அத்வைதம் என்பது சிவஞான முனிவர் கொள்கையாகிறது.

இனி, அத்துவிதம் என்னும் சொல்லுக்குச் சம்பந்த விசேடம் உணர்த்துவதே பொருள்; இரண்டு பொருட்கு இடை நின்ற சம்பந்தம் அல்லது உறவு என்பதை உணர்த்துவதே அதன்பொருள்.

பொருளின் உண்மை அல்லது பொருளின் இலக்கணம் உணர்த்து வது அச்சொற்குப் பொருளன்று என்பதைத் திட்டவட்டமாக அமைத்துக் கூறிவிடுகிறார்.

''சித்தாந்த சைவரின் கொள்கைப்படி, அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் என்னையெனின், ''அது நீ ஆகின்றாய்'' எனவும் ''அது நான் ஆகின்றேன்'' எனவும், ''அது இது ஆகின்றது'' எனவும் மூவிடம் பற்றி நிகழும் ''தத்துவமசி'' முதலிய மகா வாக்கியங்களைக் கேட்ட வழி, அது என்பது ஒரு பொருள் நீ என்பது ஒரு பொருள் ஆகலின், ஒரு பொருள் மற்றொரு பொருள் ஆமாறு யாங்ஙனம் என்னும் ஐயம் நீக்குதற்கு எழுந்ததாகலின், அது இது ஆதற்கு ஏதுவாய் அவ்விரண்டற்கும் உள்ள சம்பந்த விசேடம்உணர்த்துதலே அத்துவிதம் என்னும் சொற்குப் பொருள் என்றுகொள்க'' எனச் சிவஞான போத ஆறாம்நூற்பா இரண்டாம் அதிகரணத்தில் எழுதிக் காட்டினார்.

இனி, **அத்துவிதம்** என்ற சொல்லால் உணர்த்தப்பெறும் சம்பந்த விசேடம் என்னை?

**சம்பந்த விசேடப் பிரிவும் மறுப்பும்**

1. ஆற்றுநீரும் கடல்நீரும் தம்மிற் சேர்ந்தாற் போலவும், குடத்தின் உள்ளிருக்கும் ஆகாயமும் மகா ஆகாயமும் தம்மிற் சேர்ந்தாற் போலவும் உள்ள ஐக்கிய சம்பந்தமா?

அன்று. ஐக்கிய சம்பந்தத்தில் இரண்டும் ஒன்றாகவே ஆகிவிடு கிறது. அத்துவிதம் என்று உய்த்துணர வைத்ததன் நுட்பம் இல்லாமலே அமைந்துவிடுகிறது.

2. குண குணிகள் தம்முள் இணைந்து நின்றாற் போன்ற தாதான்மிய சம்பந்தமா?

அன்று. முதல்வனைப் போலவே ஆன்மாவும் குணியாக நிற்ப தன்றி, முதல்வன் குணியாக, ஆன்மா குணமாக நிற்றல் இன்மை யின் அதுவும் பொருந்தாது.

3. விரலும் விரலும் சேர நின்றாற் போலும் சையோக சம்பந்தமா?

சையோக சம்பந்தம் வியாப்பியப் பொருள்களுக்கே அமையும். வியாபகப் பொருள்கட்கு அமையாது.

4. ஒருவாற்றான் இயைபுபடும் சொரூப சம்பந்தமா? பொருந்தாது. ஆன்மாவானது சிவானந்தத்தை அனுபவித்தல் அமையாது.

எனவே, அபேத சம்பந்தமாகிய ஐக்கியமும் இல்லை. பேத சம்பந்தமாகிய சையோகமும் இல்லை. பேதாபேத சம்பந்தமாகிய தாதான்மியமும் இல்லை என எடுத்துக் காட்டி மறுத்தது சிவஞான முனிவரின் பணி.

**அத்வைதம் என்ற சம்பந்தம்**

1. பொருள் ஒன்று; அது இருதன்மைப்பட்டு நிற்கும் குண குணி, அவயவம் அவயவி என்ற வகையில் ஒரே பொருள் இரு தன்மைப்பட்டு நிற்குமானால் அது **தாதான்மியம்**. இருதன்மைப் பட்டு நின்றாலும் முன்னது வியாபகம் பின்னது வியாப்பியம். குணி வியாபகம், குணம் வியாப்பியம்.

இங்கே இரண்டு இலக்கணங்களும் அமையவேண்டும். ஒரே பொருள் இருதன்மைப்பட்டு நிற்கும்போது குணி, குணம், அவயவி அவயவம் என்ற வகையில் வேறுபட்டு நின்றாலும், வியாபக வியாப்பிய சம்பந்தமும் அமையவேண்டும். இது தாதான்மிய சம்பந்தம்.

2. இரண்டு பொருள்கள், யாதேனும் ஒரு காரணத்தால் ஒன்றென ஒருதன்மைப்பட நிற்கும். இங்கேயும் வியாபக வியாப் பிய சம்பந்தம் அமைய வேண்டும். இதுவும் தாதான்மியமே ஆயினும் இருபொருள் ஒருதன்மைப்பட நின்றதாதலின் இந்த சம்பந்தமே **அத்துவித சம்பந்தம்**. (அன்மைப் பொருள் பற்றி அத்துவிதம் என்னும் சொல்லால் உணர்த்தப்பட்ட சம்பந்தம்)

பொருண்மையால் வேறு; கலப்பால் ஒன்று; உயிர்க்குயிராதல் தன்மையால் உடனாதல் என்ற மூன்றும் இயையநின்ற நிலையே, அன்மைப் பொருள் பற்றி வந்த அத்துவித சம்பந்தம். மூன்று நிலைகளுக்கும் வெவ்வேறு எடுத்துக்காட்டு அமைப்பதால் தம்முள் முரணுவ போலத் தோன்றும் என எடுத்துக்காட்டி, சிவஞான முனிவர் மூன்று ஆசாரியர்களும் எடுத்துக்காட்டும் ஒரே எடுத்துக் காட்டை எடுத்துக் காட்டுகின்றார்.

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்"

இது, மெய்கண்டார், சிவஞானபோதம் பதினொன்றாம் நூற்பா

"காட்டக் கண்டிடும் தன்மையுடைய கண்ணுக்கு
ஏயும் உயிர் காட்டிக் கண்டிடுமா போல ஈசன்
உயிர்க்குக் காட்டிக் கண்டிடுவன்"

இது அருணந்தி சிவாசாரியாரின், சிவஞான சித்தியார்.

"அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதமாகும்"

என்பது உபாபதி சிவாசாரியாரின் சிவப்பிரகாசம்.

## 'சுத்தாத்வைதம்' என்ற வழக்கு

இரண்டு பொருள் யாதேனும் ஒரு காரணத்தால் அது அதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய் நின்றற்கு ஏதுவாய், வியாபக வியாப்பிய அமைப்பும் உடையதாய் நின்ற தாதான்மிய சம்பந்தமே அத்துவித சம்பந்தம். இவ்வத்துவித சம்பந்தம் '**சுத்தாத்துவிதம்**' என வழங்கும் வழக்குடையது என்று கூறுகிறார் சிவஞான முனிவர். இங்கே, சித்தாந்த நெறிக்குரிய பெயராக, '**சுத்தாத்விதம்**' என்ற பெயர் அமையவில்லை.

இருபொருள் அதுவதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய் நிற்றற்குரிய ஏதுவாய் வியாபக வியாப்பிய அமைப்புடையதாய் நின்ற சம்பந்தத்துக்குச் '**சுத்தாத்து விதம்**' என்ற குறியீடு உண்டு.

இன்மைப் பொருள் அடிப்படையிலும், மறுதலைப் பொருள் அடிப்படையிலும் ஏனையோர் 'அத்துவிதம்' என்பதற்கு விளக்கம் கூறியபோது, கேவலஅத்துவிதம் என்றும் விசிட்ட அத்துவிதம் என்றும் சிவ அத்துவிதம் என்றும் துவைத அத்துவிதம் என்றும் பெயரமைத்து, அத்துவிதம் என்ற சொல்லுக்கு அடைமொழி அமைத்து நிறுத்தியே விளக்கம் கூறினார். சங்கரர் கூறும் அத்துவிதப் பொருள் கேவலம் என்ற அடைமொழியைக் கொண்டது. இராமானுசரின் அத்துவிதப் பொருள் விசிட்டம் என்ற அடைமொழியைக் கொண்டது. அத்துவிதம் என்ற சொல்லோடு அடைமொழியை அமைத்துத்தான் அவர்கள் விளக்கம் கூறினார்கள்.

அன்மைப் பொருள் பற்றி இருபொருள் ஒரு தன்மைப்பட்டு நின்ற தாதான்மிய சம்பந்தம் எந்த ஒரு அடைமொழியும் இல்லாமலேயே 'அத்துவிதம்' என்ற சொல்லாலேயே விளக்கப் பெற்றது. அடைமொழியின் உதவி வேண்டாமலேயே, அன்மைப்பொருள் பற்றிய சம்பந்தத்தை 'அத்துவிதம்' என்ற சொல் சுத்தமாக நின்றே அச்சம்பந்தத்தை உணர்த்திய காரணத்தால் 'சுத்த அத்துவிதம்' என்று வழங்கப் பெற்றது என்பது சிவஞான முனிவர் தரும் விளக்கம்,

யாதொரு அடைமொழியும், விசேடணமும் இல்லாமல் நின்ற 'சத்து' எபைதைச் 'சுத்த சத்து' என்று குறிப்பிடும் தார்க்கிகர் வழக்கை எடுத்துக் காட்டுகின்றார்.

எனவே, அத்துவிதம் என்பதற்கு இன்மை, மறுதலை என்ற இரண்டன் அடிப்படையில் விளக்கம் கூறுவோர், தாம் கூறும் விளக்கத்துக்கு ஏற்ற வகையில் அடைமொழியை இணைத்துத் தான் பொருட்படுத்த வேண்டும்.

அன்மைப் பொருளின் அடிப்படையில் அத்துவிதம் என்பதற்கு விளக்கம் காண முற்படின், அது இருபொருளின் இடை அமைந்த சம்பந்தத்தை உணர்த்துவதாய் அமையும். அத்துவிதம் என்ற சொல் அடைமொழி ஏதும் இல்லாமலேயே, சுத்தமாக நின்றே பொருள் விளக்கம் செய்தலின் 'சுத்தாத்துவிதம்' எனப்பெற்றது. ஏனையோர் அடைமொழி சேர்த்தே விளக்குதலின், அவர் கூறும் அத்துவிதம் 'சுத்தாத்துவிதம்' ஆகாது எனவும் கொள்ளல் வேண்டும்.

இவ்வளவும் இங்கே கொள்ளப்பட்ட விளக்கம், 'அத்துவிதம்' என்ற சொற்பொருளைப் பற்றியதே. அன்மைப் பொருள் கொள்ளும் நிலையில், அமைக்கப்பெறும் சம்பந்தம், உறவு 'சுத்தாத்துவிதம்' எனப்பெறும் என்பதே.

சித்தாந்த சைவம் சுத்தாத்விதம் ஆகுமா என்ற விளக்கம் இங்கே அமைக்கப்பெறவில்லை. இருபொருள் ஒருதன்மைப்பட்டு நிற்கும் நிலையில் அமையும் உறவு 'சுத்தாத்விதம்' எனப்பெறும் என்பதே.

## ஒரு மறுப்பு

இரு பொருள்கள் இடையில் அமைந்த ஓர் உறவை இங்கே கூறப்பெற்ற இலக்கணங்களெல்லாம் அமைய நிறுத்திப் பார்த்த பிறகே 'சுத்தாத்துவிதம்' என்ற பெயரை அமைத்து விளக்குதல் வேண்டும். இங்கே காட்டப்பெற்ற இலக்கணம், விளக்கம் என்பவை தவிர, வேறு விளக்கம் அமைத்துக் கொள்ளும் வகையில் 'சுத்தாத் வைதம்' என்ற பெயரைப் பயன்படுத்துதல் கூடாது. என மறுத் தமைத்து எச்சரிக்கை செய்கிறார் சிவஞான முனிவர்.

அனாதிமுத்தனாகிய சிவனும், இடையே முத்தனாகிய ஆன்மாவும் சமமாக நிற்கிறார்கள். சந்நிதிமாத்திரையே தொடர்ப.

சுத்தமாதல் சாதி ஒருமை பற்றி, இந்நிலையைச் சுத்தாத் வைதம் என்பது பொருந்தாது.

## இருபொருள் ஒருமை பெறல்

இனி, அத்துவிதம் என்ற சொல்லின் பொருளுணர்த்த முற் படும் போது இருபொருள் அது அதுவாய் ஒற்றுமைப்பட்டு ஒன்றாய் நிற்றல் ஒருவகைத் தாதான்மிய சம்பந்தம் என்று விளக்கப் பெற்றதாதலின், இருபொருள் ஒற்றுமைப்பட்டு ஒன்றா தல் என்பதைப் பல உவமைகளால் இணைத்துணர வேண்டும் என்றவகையில் சிவஞான முனிவர் சிவஞான போதப் பத்தாம் நூற்பாவில் 'ஏகனாதல்' என்ற சொல்லின் விளக்கம் உணர்த்தும் வழி எடுத்துக் காட்டுகின்றார்.

1. குடம் உடைந்தவழிக் குடா காயமும் மகாகாயமும்
ஒன்றாதல் போல ஒற்றுமைப்படுதலா?

2. இப்பியை வெள்ளி என்பது போலத் திரிவுக்காட்
சியால் ஒற்றுமைப் படுதலா?

3. மண்ணே குடம் என்பது போல ஒன்று திரிந்து
ஒன்றாய் ஒற்றுமைப் படுதலா?

4. வெள்ளையும் தாமரையும் போலக் குணகுணித்
தன்மையால் ஒற்றுமைப் படுதலா?

5. தீயும் இரும்பும் போல ஒன்றின் ஒன்று விரவுதலால்
ஒற்றுமைப் படுதலா?

6. பாலும் நீரும்போலப் பிரிக்கப்படாத சையோகத்
தால் ஒற்றுமைப் படுதலா?

7. கருடனும் மாந்திரிகனும் போலப் பாவனைமாத்தி
ரத்தால் ஒற்றுமைப் படுதலா?

8. காய்ச்சிய இரும்பின் நீர்போல ஒன்றினொன்று
இலயமாய் ஒற்றுமைப் படுதலா?

9. பேயும் பேய்ப்பிடியுண்டவனும் போல ஆவேசத்
தால் ஒற்றுமைப் படுதலா?

10. விறகின் தீப்போல விளங்காமையான் ஒற்று
மைப் படுதலா?

11. ஞாயிற்றின் ஒளியின் விளக்கொளி போலச்
சத்திகெட்டு நிற்றலால் ஒற்றுமைப் படுதலா?

12. தலைவனும் தலைவியும் போல இன்ப நுகர்ச்சி
மாத்திரையால் ஒற்றுமைப் படுதலா?

13. நட்டோர் இருவர் போல நட்பின் மிகுதியால்
ஒற்றுமைப் படுதலா?

14. ஆவும் ஆமாவும் போல ஒப்புமை மாத்தி
ரையால் ஒற்றுமைப் படுதலா?

என இவ்வாறு வினாக்கள் மூலம் உணர்தலாகும், ஒற்றுமைப் படுதலை எடுத்துக் காட்டி, இவற்றுள் எல்லாம் அடங்காத வகையில் அமைந்த அதுஅதுவாய் ஒற்றுமைப்படும் நிலையை உணர்ந்து, அதன் அடிப்படையில் 'அத்துவிதம்' என்னும் சொற்பொருளை அமைத்துக் கொள்ளல் வேண்டும் எனவும் சிவஞான முனிவர் உணர்த்தி யமைத்தார்.

## சித்தாந்த நெறி சுத்தாத்வைதமா?

மெய்கண்டாரை முதன்மையாகக் கொண்ட மெய்கண்ட சந்தானத்தின் வழிநின்றும், மெய்கண்ட நூல்களின் துணைக் கொண்டும் மாதவச் சிவஞான சுவாமிகளின் அடிச்சுவடு கொண்டும் உணர்ந்து தெளியத் தகும் சைவ சித்தாந்தச் செந்நெறியைச் '**சுத்தாத்வைதம்**' என்ற விளக்கத்தின் அடிப்படையில் உணர்ந்து கொள்ளுதல் இயலுமா என்றால், மாதவச் சிவஞான சுவாமிகள் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அளிக்கும் விளக்கம் ஒரே வரியில் அமைகின்றது.

**''சித்தாந்த முத்தியை நிலைபெறுத்துவது சுத்தாத்துவித நிலை என்பதே''.**

சிவஞான போதத்துப் பதினொன்றாம் நூற்பாவின் இரண்டாம் அதிகரணத்தின் முன்னுரையில் இதை எடுத்துக் காட்டி, ஆன்மலாபம் இரண்டனுள் முதலாவதாக நின்றது சித்தாந்த முத்தியை நிலைபெறுத்தும் சுத்தாத்துவித நிலையைப் பெறுதல் எனவும், இரண்டாவதாக நின்ற ஆன்மலாபம் சிவப்பேறு எனவும் அமைத்துக் காட்டுகின்றார்.

ஆன்மலாபம் இரண்டையும் முறையே சிவயோகம், சிவ போகம் என அமைத்துக் கொள்ளலாம். சுத்தாத்துவிதநிலையைப்

பூரணமாகப் பெற்று நிற்றல் என்பதே 'சிவயோகம்' என்ற அனுபவநிலை.

ஆன்ம உணர்வு திருவருளோடு **பிரிப்பின்றி ஒன்றி**, அதன் வயப்பட்டு நிற்றலின் அங்ஙனம் தன்னைத் தன்வயப்படுத்தித் தானேயாய் நிற்றல் முதல்வன் இயல்பு என்பது உணரப் பெறும். இவ்வுணர்வே சுத்தாத்துவித நிலை உணர்வு என்றும் நின்மல துரியம் எனவும் அருள்நிலை எனவும் சிவயோகம் எனவும் கூறப் பெறும். இந்நிலை அனுபவம் இவ்வுலகில் இங்கேயே, இவ்வுடம்பி லேயே உணர்ந்து அனுபவித் தறியப் பெறும் நிலை எனவும் கொள்ள வேண்டும்.

**''அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதம்''**

என்பதன் அனுபவநிலையை உணரும் அதீதநிலையியல்பு எனவும் விளக்கிக் காட்டினார்.

சித்தாந்த சைவநெறியைச் சிவஞானபோதம் பத்தாம் நூற்பா வானது.

**''அவனே தானே ஆகிய அந்நெறி''**

என விளக்கம் செய்து முடித்து நின்றபின், அந்நெறி சார் அனுபவ நிலைகளை முறையே விளக்கும் வகையில் பதினொன்றாம் நூற்பா வானது சுத்தாத்துவித நிலை அனுபவத்தையும் சிவானுபவத்தை யும் இரண்டு அதிகரணங்களால் விளக்கி முடித்து நின்றது.

இனி, இந்நிலையைத் தன்கண் அமைத்து நின்ற நிலைபற்றி விளக்கினாலும், தன்கண் காணும் சுத்தாத்துவித நிலையைப் புறத்தே காட்டி, அந்நிலையை அன்பால் தொழுக என எடுத்துக் கூறும் முறையில் பன்னிரண்டாம் நூற்பாவின் நான்காம் அதி கரணத்தை அமைத்துக் காட்டுகின்றார்.

''முதல்வன் சடசித்துக்கண் மாட்டு நிற்கும் நிலைமை அறியப் பெற்றார்க்குக் கண் அருக்கன் போல அது இது எனப் பிரித்து இசைத்து ஓதப்படுவதாய பேத நிலைமையனும் அல்லனாய், உடல் உயிர் போல அதுவே என்று ஓதப்படுவதாய அபேத நிலைமையனும் அல்லனாய், குண குணி போல அதுவாகிய இது என்று பக்கிசையாமல் ஓதப்படுவதாய பேதாபேத நிலைமையனும் அல்லனாய் அம் மூன்றற்கும் **பொதுமையான்** அறிவொளி போல் அத்துவிதமாய் நிற்கும் முறையால் சடசித்துப் பொருள் யாவும் அவன் வடிவேயாம் என்றஉணர்வை நேர்நின்று கண்டு தெளியவும்,

முடியும். அந்நிலையில் அகத்தேயும் புறத்தேயும் கண்டு நின்ற வனை **"அத்துவித சித்தாந்தத்தைப் பெற்றவனே"** எனவும் விளித்துக் காட்டும் வகையில் மெய்கண்டாரின் திருட்டாந்த வெண்பா ஒன்று அமைகிறது. அது

"அது இது என்றது அது அல்லான் கண்டார்க்கு
அது இது என்றதையும் அல்லான்—பொது அதனில்
அத்துவித மாதல் அகண்டமும் தைவமே
அத்துவிதி அன்பில் தொழு"

என வரும்.

எனவே, சித்தாந்த முத்தி என்பது சுத்தாத்துவித நிலை அனுபவமும் சிவப்பேறும் என இரண்டாய் நின்ற பெற்றித்தே என உணரும் வகையில் அமைத்துக் காட்டினார்.

எனவே, நெறி என்ற வகையில் சித்தாந்த சைவ நெறி என்றும் அனுபவ வகையில். சுத்தாத்வைத நிலையை யுடன் கொண்ட சிவானுபவம் என்றும் கொள்ள வைத்தார்,

அடுத்து, உயிர்களின் பெத்தம் முத்தி என்ற இரு வேறுபட்ட நிலைகளினும் திரிபின்றி ஒரு பெற்றித்தாய் நின்று, அத்துவிதமாய் மாறாது உபசரித்து வருதல் என்பதை முதல்வன் இலக்கணமாகக் கொண்டு, இந்நெறிக்குச் **சுத்தாத்வைதம்** என்ற குறியீடு வழங்கப் பெற்றது என்று ஒருசிலர் எண்ணுவதற்கும் எழுதுவதற்கும் உரிய வகையில் சிவஞானமுனிவர் பின்னுள்ள மூன்று நூற்பாக்களின் விளக்கங்களிற் பலமுறை எழுதிக் காட்டினாலும், **சுத்தாத்வைதம்** என்ற பெயர் அமைவதற்கு அதை யாண்டும் காரணமாக அமைத்துக் காட்டவில்லை. அம்படி விளக்கம் கூறுவது சிவஞான முனிவர் கருத்துக்கு முரண் எனவும் உணர்தல் வேண்டும்.

## முடிப்புரை

'சுத்தாத்வைதம்' என்பதன் விளக்கத்தை இலக்கண வகை யாலும் உறவியல் வகையாலும் தெளிவுற அமைத்துக் கொள்ள வேண்டும்.

கேவலாத்வைதம், விசிட்டாத்வைதம் சிவாத்வைதம் என்பவை வேறு சித்தாத்வைதம் வேறு எனப் பாகுபடுத்தி

உணர்தல் வேண்டும். கேவலாத்வைதம் முதலியன எவ்வகையாலும் சுத்தாத்வைதம் ஆகா எனவும் உணர்தல் வேண்டும்.

'சுத்தாத்வைதம்' என்றதன் விளக்கத்துக்கு வேறு எந்தக் கொள்கையும் அமையாது.

'சுத்தாத்வைதம்' என்ற நிலைக்கொத்ததாய் நின்றதே சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பியல்பு எனத் தெளிந்து, அதன் அரணாக,

"பெருநூல் சொன்ன அறத்திறனால் விளைவதாய்
உடலுயிர், கண் அருக்கன், அறிவு ஒளி போற்
பிறிவரும் அத்துவிதமாகும் சிறப்பினதாய்,
வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்"

என்பதை அமைத்துக் கொள்ள வேண்டும், இத்தகைய அறிவு பெற்றவனை "அத்துவித சித்தாந்தி" எனக் குறியிட்டாளுகின்றார் மாதவச் சிவஞான சுவாமிகள்.

# 7. இறுவாய்

'சிவஞான முனிவர் நோக்கில் சைவசித்தாந்தம்' என்ற தலைப்பில், சிவஞான முனிவரின் அருட்கொடைகளாக ஐந்து செய்திகள் முன்னுள்ள தலைப்புக்களில் அமைத்து ஆய்வு செய்யப் பெற்றன.

உலகளாவிய பொதுமை என்ற அடிப்படையிலும், உலகத் தத்துவ அரங்குக்குச் சிவஞானமுனிவர் சித்தாந்த சைவத்தின் வழி நின்று வழங்கிய கொடைகள் என்ற சிறப்பாலும், உலகத் தமிழ் இயக்கத்தின் கொள்கைக்கு அரண் செய்யும் வகையில் அவ்வைந்தும் ஆய்வுப் பொருளாயின.

அறிவுப்பிண்டம் என நின்ற உயிர் இந்த உலகின் எந்தப் பகுதியில் இருப்பினும், அது சிவஞானமுனிவர் என்னும் அறிவியல் மூச்சுக்காற்றால் வாழ்ந்ததாக, வாழ்வதாகத் தான் அமையும். சிவஞான முனிவரின் சாயல் படாத, திருத்தம் பெறாத, வலிமை வாய்ந்த வாழ்வியற்பாதை அமைத்துக் கொடுக்கப் பெறாத அறிவியற் கூறே இல்லை எனலாம்.

"கலைகள் எல்லாம் சிவஞான முனிவராகத் தோன்றின போலும்! தருக்கமும், வியாகரணமும், இலக்கியமும், இலக்கணமும் தமிழ்ச் சிவஞான முனிவருக்குப் பணியாட்கள் ஆகித் துணை புரியத் தவம் கிடந்தனவோ! என்னவோ தெரியவில்லை."

"மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்தின் அக(உள்ள)த்தைத் திறந்து காட்டவல்ல திறவு சிவஞான முனிவர் உரையே. சிவஞான முனிவர் நுண்உடல் கொண்டு மெய்கண்டாருடன் பேசிப் பேசி உரை வரைந்தனரோ என்று நினைக்குமாறு அவர் தம் உரை அமைந்து இருக்கிறது"

"சிவஞான முனிவர் வடமொழிக் கடலையும் தென் மொழிக் கடலையும் உண்ட பெருங்கொண்டல் (மேகம்). அக்கொண்டல் பொழிந்த மழையின் தேக்கம் சிவஞான பாடியம். சிவஞான முனிவரது தத்துவ ஆராய்ச்சி நுட்பத்தை நோக்கும் போது நீலகண்டரும் சங்கரரும் இராமானுசரும் மத்துவரும் ஓர் உருக்கொண்டு சிவஞான முனிவராக வந்தனரோ? என்றும், அவர் தம் தமிழ் நடையை நோக்கும்போது, நக்கீரரும் இளம்பூரணரும் பரிமேலழகரும் நச்சினார்க்கினியரும் ஓர் உருக்கொண்டு அவராகப் போந்தனரோ? என்றும் அறிஞர் கருதுதற்கு இடன் உண்டாகிறது.

மேலே காட்டப்பெற்றவை தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் சைவசித்தாந்த சமாஜப் பதிப்பாக வெளிவந்த சிவஞான மாபாடியத்தின் அணிந்துரையில் சிவஞான முனிவரைப் பற்றி எழுதியவை.

இவ்வளவையும் எழுதிய பின்னர், திரு.வி.க. அவர்கள், "இனி வரும் தத்துவ உலகில் சிவஞான முனிவர் பாடியம் அரசு வீற்றிருக்கும் என்பதில் ஐயம் இல்லை. தற்காலச் சைவ உலகம் சிவஞான சுவாமிகளது பெருமையை உணராது கிட(இரு)ப்பது வருந்தத் தக்கது." என்ற வரிகளையும் எழுதியுள்ளார்கள்,

'சைவசித்தாந்தம் ஒரு கட்டுக்கோப்பான தத்துவக் கொள்கையே' என்ற கருத்தை விளக்க முற்படும் போது, சில கூறுகள் காணப்பெறவில்லையே எனத் தத்துவ உலகம் சுட்டிக்காட்டும் குறைகளை நீக்கி நிறைவு செய்யும் வகையில், மெய்கண்டாரின் திருவாக்கின் விளக்கமாக, சிவஞானமுனிவர் வழிநின்று எடுத்துக் காட்டப் பெற்ற சில தத்துவக் கூறுகளின் ஆய்வியல் விளக்கங்களாக அமைந்தவைகளே முதலிரண்டு கட்டுரைகள்.

உலகத் தத்துவ அரங்குக்கு அணிசெய்யும் முடிமணிகளாக, சிவஞானமுனிவர் சித்தாந்தச் செந்நெறியின் சார்பில் வழங்கும் கொடைகளாக, இரண்டு கொள்கைகள் சிவஞான முனிவரின் அருள் உள்ளமாம் பொய்கையில் மலர்ந்தன. அவைகள் வெளிப்பட மணம் வீசிய இடம் சிவதத்துவ விவேகம், அவைகளை ஆய்வியல் முறையில் அறிமுகம் செய்து நிலைநாட்டும் பணியில் அமைக்கப் பெற்றவைகளே **நட்பியலுரை** எனவும் **'முதல்வித்தை'** எனவும் மூன்றாவதாக நான்காவதாக இடப்பெற்ற கட்டுரைகள்.

'சுத்தாத்வைதம்' என்ற பெயரின் அடிப்படை விளக்கத்தினுக் கொப்ப, சித்தாந்தச் செந்நெறியை விளங்கிக் கொள்வதே அக் கொள்கையின் சிறப்பு என்ற கருத்தை விளக்கும் வகையில் சிவஞான முனிவரின் முழுமையான பணியை உடன்கொண்டு எழுதப்பெற்றதே 'சுத்தாத்வைதம்' என்ற கட்டுரை.

முப்பத்துக்களின் குறியீடுகளாக நின்ற முப்பொருள்களின் இலக்கண விளக்க எழுத்துக்களாக ஓர் ஐந்தினைக் கொண்டால், அவைகளை உயிரோட்டமாகக் கொண்டு நிறுத்தப் பெற்றவைகளே இவ்வைந்தும் என உணர்வார்க்கு, இவற்றால் அருளியலின்பப் பேறு கிட்டும்.